உ



சிவமயம்

தேவிகோட்டை

வெள்ளையனூருணிக்கரையில்

எழுந்தருளியிருக்கும்

கலங்காதகண்டவிநாயகர்

# விண்ணப்பமாலை



இது

தேவிகோட்டையின்கண்

இளையாற்றக்குடிக்கோயில் பெருமரபூர்வகுப்பு

தி—வகை

வே. ஆ. தி.

மாயாண்டிச்செட்டியாரவர்கள்

குமாரர்

சிதம்பரச்செட்டியாரால்

இயற்றப்பெற்று,

சென்னை:

கணேசஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

ரௌத்திரிஸு சித்திரை.

1920.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

யாழ்ப்பாணத்துவண்ணைநகர்
வித்துவசிகாமணி
ஸ்ரீலஸ்ரீ
**சி. சுவாமிநாத பண்டிதரவர்கள்**
இயற்றியது.

**கட்டளைக்கலித்துறை.**

கலங்காத கண்ட விநாயகற் குள்ளங் கசிந்துரைத்தான்
மலங்காத பேரறி வோர்புகழ் விண்ணப்ப மாலையைப்பொன்
விலங்காத சீர்த்திய னற்சிவ பூசகன் மெய்க்கண்மணிக்
கலங்காத விற்கொள் சிதம்பர நாம கவியரசே. க

இன்னமு மின்னனைத் துன்னிய நன்மை யிசைத்திடுவல்
கன்னமு ணின்னமு தாயவின் சொல்லன் ககமன்வெள்ளி
பொன்னமு தன்றரு புந்தியிற் கூரிய புந்தியுளான்
றன்னமு மந்திய மின்றிநட் பென்னொடு சார்ந்தவனே. உ

பொன்மய மாய்ப்பிர காசிக்குந் தில்லைப் பொதுநடஞ்செய்
சின்மயன் குஞ்சித பாதபங் கேருகஞ் சிந்தைவைத்த
வின்மையுன் வித்துவ மாமணி தேவை வசியகுலத்
தன்மைய னுத்தம சீல வொழுக்கத் தலைமையனே. ௩

---

இரண்டாஞ் செய்யுளில்—கன்னம் - காது. ககம் - கிரகம். வெள்ளி - சுக்கிரன். பொன் - வியாழன். அமுதன்றருபுந்தி-சந்திரன் பெற்ற புதன். கூரியபுந்தி - நுண்ணிய புத்தி.

காரைக்குடி வித்துவசிகாமணி

ம-ா-ா-ஸ்ரீ, ராம. சொ.

**சொக்கலிங்கச் செட்டியாரவர்கள்**

இயற்றியது.

**கட்டளைக் கலித்துறை**

விலங்காத கண்ட வியாபக னாகி விளங்கியருள்
கலங்காத கண்ட விநாயகன் பாதத்திற் காண்பவர்க்கு
பலங்காத கண்டரும் விண்ணப்ப மாலை வனைந்தவன்மெய்ப்
புலங்காத விற்கொள் சிதம்பர வேள்சிவ பூசகனே.

---

ஸ்ரீரங்கம் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதரும்

வித்துவானும் ஆகிய பிரம்மஸ்ரீ

**குரு. சுப்பிரமணிய ஐயரவர்கள்**

இயற்றியது.

**நிலைமண்டில ஆசிரியப்பா.**

உலகெலாம் பரவ விலகொளி பரப்புந்
திநகர சோதி * யனதிரு மேனித்
திங்கட் கொழுந்திற் றங்கொரு கோட்டுத்
துங்கக் கயமுகத் தைங்கைப் பசுபதி
யங்கிங் கெனாமை லெங்குமான் பாலில்
வெண்ணெயை நிகர்ப்ப வுண்ணிறைந் திருக்குந்
தன்னுருக் கண்டே மன்னுயி ரெல்லா
முப்புமா றிந்த வையமீ தரார்
பொன்னாட் டினுமுயர் தென்னாட் டின்கண்
ணோத்திர மெனப்பலர் தோத்திரம் புரியத்

---

* அன - அன்ன என்னும் உவமத்துருபு இங்கே இடைக்குறைந்து நின்றது.

திருமக டிருமான் மருமக ளெனுமிரு
பூவிக ளகலாத் தேவி கோட்டைப்
பதிதனி னுரு மதிதவழ் புரிசை
சூழ்திருக் கோயில் வாழ்தரு கடவு
ணிலங்கா தலிக்குங் கலங்கா தகண்ட
விநாயக னென்னு மநாதிமூர்த் திக்கணி
சாலும்விண் ணப்ப மாலை யெனுஞ்சுப
சோபந நிறைவிஞ் ஞாபந நூலை
யடிமையென் றுளப் படிபவ ராற்ற
னிறைதம திறைபாற் குறைசொலன் முறைசொல
னயக்கு முலகத் தியற்கை யென்பதுங்
கற்புக் கினிமையுஞ் சொற்பொரு ணயமு
முத்தம சைவ பத்தி முதிர்ச்சியும்
வேதா கமதிட போதா நந்தமும்
விரும்பிப் படிப்போர்க் கரும்பச் செய்தன
னன்னவன் யாரெனிற் பன்னுவன் கேண்மின்
னாட்டுமத் தேவி கோட்டைமா நகரத்
தனைவரும் விரும்புந் தநவை சிபகுலத்
தொன்பான் கோயிலுண் முன்பா கச்சொலு
மேற்ற மாரிளை யாற்றக் குடிப்பெரு
மாயூர் வகுப்பிற் சுராபூ பதியெனக்
* கண்ணிய † கண்ணிய நண்ணிய ‡ திண்ணனூர்
வகைமரு வுப்பெருந் தகைமா யாண்டிப்
பேர்வணி கற்குப் பூர்வ பாக்கிய
மைந்தனென் றோங்க வந்தவ தரித்தோன்
றவாத மகிமைத் துவாத சாந்தத்

---

* கண்ணிய - கருத; இது செய்யியவென்னும் வாய்பாட்டுவினை யெச்சம். † கண்ணியம் - மேம்பாடு; இது கண்யம் என்னும் வடமொழி. ‡ திண்ணனூர் - திண்ணப்பசெட்டியார்; திண்ணனூர் என்பது ஸ்ரீ கண்ணப்பநாயனருடைய பூர்வீக யோக நாமம்.

# சிறப்புப்பாயிரம்.

திருப்பதி யிடத்து நெருப்பிடை வேவா
தாற்றினொ டெதிர்த்து நீற்றொளி பரப்பிச்
செகப்பிர சித்தி மிகப்பொலி செந்தமி
ழிலக்கண விலக்கிய வலைக்கடற் குளித்தோன்
கற்பவை கற்று நூல் சொற்றாங் கொழுகுவோன்
முன்றொடர் மொழியை யின்றியா வர்க்கு
மேத்துகோ யிலெனு மாத்திரை யானே
யுந்நத மான தன்னை யுணர்த்தி
யெத்தலங் களினு முத்தமோத் தமமாந்
தில்லைமா நகரி னெல்லைமிக் குறைவோன்
மூர்த்தி கேத்திர தீர்த்த மகிமை
சாலப் பதியின் மேலைக் கோபுரக்
கற்பக விநாயகற் கற்பினொ டும்முதற்
சாதிவெண் பாவந் தாதிசொற் றோனம்
மாபுரக் கீழைக் கோபுரத் தயலே
யரவு புலிதொழும் பரம னாடகம்
பார்க்க வந்தவர் யார்க்கு மருந்தப்
புந்திகூர் தண்ணீர்ப் பந்தர்வைத் துள்ளோன்
வெண்டிரு நீற்றொடு கண்டி யெனுஞ்சிவ
சிந்நந் தரித்துப் பொன்னம் பலவன்
குஞ்சித சரண நெஞ்சினு ளிருத்தி
நேசித் தவனையே பூசித் துவப்போன்
யானவ னென்னும் வேற்றுமை யின்றித்
தானெனிற் கலந்த தகுநட் பாள
னிதம்பெற யார்க்கு மினியவே கூறுஞ்
சிதம்பரப் பெயர்கொள் சீமான் றானே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

# விஞ்ஞாபனம்.

☞ ஸ்ரீ கலங்காத கண்ட விநாயகப்பெருமான், தேவிகோட்டையில் நகரத்தாருள் மாற்றூர்க்கோயில் உறையூர் வகுப்பு - வீர - அள - வகையார்களால் வெள்ளையனூருணிக் கீழ்க்கரையில் அமைத்துள்ள ஆலயத்தில் அவர்களாற்செய்விக்கும் ஆராதனையை ஏற்று எழுந்தருளியிருந்து வருகின்றனர். இப்பெருமான் தம்மை உபாசிப்பவர்க்குச் சர்வாபீஷ்டங்களையும் அதி சீக்கிரத்தில் அநுக்ரஹிக்குந் திருவருண்மிக்க வரதர் என்பதனைச் சுவாநுபவத்திலறியலாம்.

இங்ஙனம்,

வெ. ஆ. தி. மா. சித.

# நூற்பயன்.

### நேரிசை வெண்பா.

கல்வி தருவள் கலைமா தபரிமித
செல்வந் தருவ டிருமாது—பல்விதத்திவ்
விண்ணப்ப மாலை விரும்பித் துதிப்பவர்க்கு
நண்ணிப் பெருகு நலம்.

---

☞ இவ்விண்ணப்பமாலையிற் சில செய்யுட்களுக்கு உரையும், அரும்பதப் பொருளும், விஷய விவரணமும் ஒவ்வொரு பக்கங்களினும் அடிப்பாகத்தில் அவ்வச்செய்யு ளிலக்கத்தை யிட்டு வரையப்பெற்றுள்ளன. அன்பர்களனைவரும் உற்று நோக்குவாராக.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

தேவிகோட்டை

வெள்ளையனூருணிக்கரையில்எழுந்தருளியிருக்கும்

# கலங்காதகண்ட விநாயகர்

# விண்ணப்பமாலை.

---

## காப்பு.

### நேரிசை வெண்பா.

மாமாது வாழ்தேவை மன்னுகலங் காதகண்ட
நாமாதி கற்குவிண் ணப்பமெனும்—பாமாலை
பற்பல்விருப் போதவவன் பாதத் துணைசெய்யுஞ்
சொற்பொருளைத் தந்து துணை.

## நூல்.

### கட்டளைக்கலித்துறை.

பொன்வண்ண மாநின் றிருவடித் தாமரைப் பூவிலெனக்
குன்வண்ண மாமின் புறுத்து முழுவலன் போங்கவரு
டென்வண்ணத் தேவையின் வெள்ளையனூருணிச் சேதுவமர்
மின்வண்ண மேனிக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. க

---

காப்பு. மாமாது - இலக்குமிதேவி. அதிகன் - யாவர்க்கும் மேற்பட்டவன். பாதத்துணை - திருவடியிணைகள்.

க. பொன் வண்ணம் என்பது - ஸ்ரீமந் - நடராஜப் பெருமானே தமது ஆத்மார்த்த பூஜாவஸானத்திற் பிரதிதினமும் குஞ்சித சரணச் சிலம் பொலி செய்துவரக் கேட்டுவந்த பஹுஸ்தச்வரியவானும், திரு

ஆரியஞ் செந்தமி ழுத்தம நூல்கற் றறிவெனக்குக்
கூரிய தாக நினைத்துதி பேறு குலாவவருள்
சீரியதேவையின் வெள்ளைய னூருணித் திண்கரையார்
வீரிய நேய கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உ

திநகர கோடி யொளியைநின் கண்மெய் திநகரனுந்
திநகர மண்டல மத்தியை பிங்கலை சீர்ப்பவருள்
சிநகர தேவையின் வெள்ளைய னூருணித் தீரத்தமர்
மினகர வேணிக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௩

---

வாலவாயுடையாரது திருமுகப்பாசுரம் பெற்ற கீர்த்திமானும், சர்வ ஜீவசம்பாஷண சர்வ பாஷாவேதந சாதுரியவானும், திருக்கைலாய ஞானவுலா வியற்றிய ஞாநவானும், ஆலாலசுந்தர பரமாசாரியருடன் கைலைக்கெழுந்தருளிய கெப்பீரவானும், சேரமஹாராஜாவும் ஆகிய சேரமான் பெருமாணாயனார் திருவாய்மலர்ந்த பொன்வண்ணத்தந்தாதியின் முன்னின்ற மங்களச்சொல்லெனவறிக. உழுவலன்பு - விடாது தொடர்ந்த அன்பு. தென் - தென்னஞ் சோலை. சேது - கரை.

உ. ஆரியம் - சமஸ்கிருத பாஷை.

௩. திநகரன் : சூரியன். கண் - முக்கண்ணுளொன்றாய வலக்கண். மெய் - அஷ்டமூர்த்தியுளொன்றாய திருமேனி. பிங்கலை - மேற்கூறியவாறு பலதிறத்தானும் நின்னோடியைபுற்ற அந்தச் சூரியனது கலையாகிய பிங்கலை யென்க. சித்து - நகரன் = சிந்நகரன் என்னும் வடமொழி இங்கே எதுகை நோக்கிச் சிநகர னென்றிடைக்குறைந்து விளியாணீறு கெட்டது. ஞாந மயமாகிய மோக்ஷராஜதாநியையுடையாய் என்பதுபொருள்; நகரம் - இராசதாநி. அன்றியும் சிநகரம் - என்பதற்குக்கோயில்.என்பதும் ஒரு பொருள் அப்பொருள் கோட்குத் தீரத்துஅமர் சிநகர என அந்வயப்படுத்துரைக்க. தீரம் . கரை. மின் - மின்னல்: மின்னகு மினகு எனத்தொகுத்தல். நகுதல் - சிரித்தல். அரா - சர்ப்பம்: அது "குறியதன் கீழாக் குறுகலும்" என்னும் விதியால் அர எனக்குறுகிற்று. வேணி - சடை.

நபகேசி யாகிய நின்னுடை யாயிர நாமத்துளே
யபிதான மொன்றுண் டதியா சகப்பிரி யன்னென்பதாந்
தபநாம யங்கெடுத் தாள்கென் றிரந்தனன் றந்தருள்காண்
விபுவாய சோதி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௪

காரண மின்றி யுயிர்களில் வைத்த கருணையனென்
றாரண மோதிற் றுணையடி யேனுக் கநாதிமல
வேரற வத்து விதவீ டருள்க விநாயகபொன்
மேருவை நேருங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௫

மாயா தநுத்தந் தனைநினை யாங்கள் வழிபட்டிய
நோயால் வருந்தினெவ் வாறது முற்று நொடிக்கினுடல்
வாயா துயிரொளி யென்றனர் மூலரு மற்றதனால்
வீயாமை யீக கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௬

---

௪. நபகேசி - வியோமகேசி. அபிதானம் - பெயர். தபநம் - வெப்பம். ஆமயம் - நோய். விபு - அகண்டத்துவம்.

௫. ஆரணம் - வேதம். அவ்வியாஜகருணாமூர்த்தி என வேதம் ஓதியதை நன்குவிளக்குவான், காரணமின்றி யுயிர்களில்வைத்த கருணையன் எனப்பட்டது. இவ்வாறு லளிதாசகஸ்ரநாமத்தில் "அவ்வியாஜ கருணாமூர்த்தி ரஞ்ஞாநத்வாந்த தீபிகா" எனக் கூறியதூஉங் காண்க.

௬. தநு - சரீரம். நொடிதல் - இறத்தல் ஒளி - ஞாநம். மூலர் - திருமூலநாயனார். அந்த மஹான் உடம்பைப் பேணுகையைப் பற்றிக் கூறிய திருமந்திரம் "உடம்பா ரழியி னுயிரா ரழிவர், திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டா, ருடம்பை வளர்க்கு முபாய மறிந்தே, யுடம்பை வளர்த்தே னுயிர்வளர்த் தேனே' "உடம்பினை முன்ன மிழுக்கென் றிருந்தே, னுடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டே, னுடம்பினு ளுத்தமன் கோயில்கொண் டானென், றுடம்பினை யானிருந் தோம்புகின் றேனே" என்பன.

அலஞ்சூழி னால்வருந் தற்ப ரெனினுநின் னாலயத்தை
வலஞ்சூழி னால்வகைப் பேறும் பெறுவர் வருவலியா
னலஞ்சூழு மாறென்ற னாசிப் பிணிநசிப் பித்திடுதி
விலஞ்சூடி னைந்த கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௭

அக்கினி மூலத் தளவிற்கு மேற்பட் டறலுச்சிபோய்ச்
சக்கெரி வுஞ்சல தோடமுங் கொண்டிட றான்வலிப்ப
நெக்குளம் வாடிய தந்தோ பிணியதை நீக்குகண்டாய்
விக்கிந ராச கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௮

அந்தத் திருட்டிக்கு நீயத் துவிதனென் னைம்பொறியு
ளிந்தத் திருட்டிகட் கெய்திலை யேனு மியமன்வரு
மந்தத் திருட்டி விழிபஞ் சடைபொழு தஞ்சலென்பாய்
விந்தைக் கினிய கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௯

---

௭. அலைந்து என்பது அலஞ்சு எனப் போலியாயிற்று. நால்வகைப்பேறு:—அறம் பொருள் இன்பம் வீடு. வில்லம் - வில்வம்; அது விலமென இடைக்குறைந்தது. வலஞ்சூழல் - பிரதக்ஷணஞ் செய்தல்.

௮. அறல் - நீர். சக்கு - கண். நெக்கு - நெகிழ்ந்து. மூலாக்கினி அதிகரித்தலால் இந்நோயுண்டாதலை "தேக மென்ற மூலமதிற் சூடு கொண்டு சிவசிவா வப்புகைதான் மேலே சென்றுற், றாகமுடன் சிரசிலே யனற்றான் மீறி யப்பென்னு நீர்பணைத்து வலியுண் டாச்சே" எனவரும் அகத்தியமுனிவர் திருவாய்மலர்ந்த வயித்தியநூற் செய்யுளா னறிக.

௯. அந்த த்ருஷ்டி - உட்கண்; இது வடமொழி. ஐம்பொறியுள் இந்தத்திருட்டிகள் - பஞ்சேந்திரியத்துளொன்றாய புறக்கண்கள்; இதனை வடநூலார் பெகிர்த்ருஷ்டி என்பர். இரண்டாமடியெடுப்பி லுள்ள இந்த என்பது சுட்டுப்பொருளைத்தருவதோரிடைச்சொல். மூன்றாமடியில் அந்தத்து இருட்டி எனப்பிரித்து முடிவில் இருளடைந்து எனப் பொருளுரைக்க. விந்தை - வீரலக்ஷ்மி. "அந்தத்ருஷ்டியத் விதாயநம:" என்பது விநாயகசகஸ்ரநாமத்து ளொன்று.

நோயெலா நோய்செய் தவர்மேல வாமெனு நூற்சொலையு
நாயினே னுற்ற பிணியையு நோக்கின்முன் னுன்பலர்க்குத்
தீயன செய்துளன் போலுந் தெரிந்திலன் றீர்வுனிடை
மேயினன் காத்தி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௦

நாம நினக்குச் சரஸ்வதி யாசிர யன்னளிநி
காமுக னென்று கழறலி னுற்பெருங் கல்விசெல்வஞ்
சாமிநின் சார்புற் றவர்கண்ண வாமுனைச் சார்ந்தனம்பாம்
வீம விசய கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௧

முக்க ரணங்களுன் கைங்கரி யத்திடை மூளினில்லா
துக்க மயப்பிர பஞ்சத் தொழிலிற் றுளைந்திளைப்புத்
தொக்க பொழுது துயரும் பொறுப்பெனைத் தொண்டினின்மூள்
விக்கை யுனக்குக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௨

---

௧௦. இச்செய்யுள் "நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய் செய்யார் - நோயின்மை வேண்டு பவர்." என்னுந் திருக்குறளின் கருத்துவைத்தோதப்பட்டது இன்னும் திருவள்ளுவநாயனாரை ஒழிந்த பிறரும் இக்கருத்துப்பற்றியே, "வெவ்வினை செய்யு மாந்த ருயிரெனு நிலத்து வித்தி, அவ்வினை விளைபு ளுண்ணு மவ்விடத் தவர்க டுன்பம், இவ்வென வுரைத்து மென்று நினைப்பினும் பனிக்கு முள்ளம், செவ் விதிற் சிறிது கூறச் கேட்டியாற் செல்வ வேந்தே" என்று சிந்தாமணியில் விரித்துக் கூறியதூஉங் காண்க.

௧௧. சரஸ்வதி ஆசிரயன் - சரஸ்வதிதேவி அடுத்திருக்கப்பெற்றவன். ஆசிரயம் - ஒன்றையடுத்திருத்தல். நளினிகாமுகன் - இலக்குமிதேவி விரும்பப்பெற்றவன். இவ்விரண்டுநாமங்களும் விநாயகசகஸ்ர நாமத்துள்ளன.

௧௨. முக்கரணங்கள் - மனவாக்குக் காயங்கள். துளைதல் - அநுபவித்தல். துயரும் - துன்புறும்; இது முற்றுச்சொல். எனைத் தொண்டினின்மூள்விக்கை யுனக்குப் பொறுப்பு எனக் கூட்டுக.

உன்னை நினைக்க நினைக்க வுருகுமென் னுள்ளமுநீ
யென்னை நினைக்கினன் றேசுக மெய்திடு மேதென்னினைப்
புன்னையு முன்னினைப் பென்னையு முள்விக்க வொன்றற்கொன்று
மின்னைவெல் வேணிக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

சீவச் செயற்குச் சிவச்செயல் வேண்டுந் திருமளிகைத்
தேவர் நினைமா நினையெனச் சொற்றார் திருவிசைப்பாப்
பாவனை யானுனைப் பண்ண வதுபண் பராமுகத்தார்
மேவற் கரிய கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௪

கன்ம நுகர்ந்து கழியவு மூன்று கரணங்களு
நின்மய மாகி மலபரி பாக நிலாவவுமே
சென்ம மளித்தனை யாணவ முண்டெனைத் தேக்கிட்டது
விம்மித மீது கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௫

---

௧௩. உன் நினைப்பு என்னையும் என் நினைப்பு உன்னையும் உள்விக்க ஒன்றற்கொன்று ஏதுவாகுமென்க; உள்வித்தல் - நினைப்பித்தல்; ஏது - காரணம்; ஏதுவாதலை "என்னை யேது மறிந்தில னெம்பிரான், றன்னை யானுந் தலைவனென் றோர்ந்தில,னென்னைத் தன்னடி யானென் றறிந்தபின், றன்னை யானுந் தலைவனென் றோர்ந்தெனே" என்னுந் தேவாரத்தானறிக

௧௪. திருமாளிகைத்தேவர் என்னுஞ்சொல் திருமளிகைத் தேவரெனச் செய்யுணோக்கிக் குறுகிற்று; இவ்வன்பர்பெருமான் கோயிற் றிருவிசைப்பாவில் ஒருபதிகச்செய்யுளிறுதி முழுதினும் "விளம்புமா விளம்பே", "நினையுமாநினையே" என்பனவாதியாகத் திருவாய்மலர்ந் தனர்; அவற்றின் பொருள் யான் உன்னைப்பேசும்படி நீ என்னுண்ணின்றுபேசுக, யான் உன்னை நினைக்கும்படி நீ என்னுண்ணின்று நினைக்குக எனவாதலின் சீவச்செயலாய்ப் புறம்பே காணப்படுமெவற்றிற்கும் உள்ளீடாய்ச் சிவச்செயலிருப்பது நன்கு விளங்கும். பராமுகத்தார் மேவற்கரிய - புறம்போக்கிய வுள்ளத்தா ரடைதற்கரிய வென்க.

௧௫ - மூன்று கரணம் - மனவாக்குக் காயங்கள். மலபரிபாகம் - மலநீங்கும் பக்குவம். தேக்கிடுதல் - ஏப்பமிடுதல். விம்மிதம் - ஆச்சரியம்.

இடையூ றனைத்தையு முன்னின் றொதுக்கி யெனைநினைச்சேர்
நடையூரு வித்தெற்குப் பேரின்ப வாழ்வினை நல்குதியிக்
கொடையூங் குளார்நிற் புகழ விலது குறியெதிர்ப்பை
விடையூர்தி மைந்த கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

வெய்ய நெறிப்புக் கதுமய மாகி விளங்குமனஞ்
செய்ய நெறிபல நூல்சொல வாய்ந்தவை செய்யப்புகிற்
பைய நழுவு நழுவிற் பரகதி பற்றலெங்ஙன்
மெய்யுண் மலருங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

இயற்கையின் மன்ற விலைநன் னெறிச்செல வெற்குனருட்
செயற்கையை யன்றித் துணையும் பிறிதில்லை தேர்ந்துளைநீ
முயற்சி திருவினை யாக்குமென் னீதி மொழியுங்கொளேன்
வியக்க வருள்செய் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

நல்லா ரிணங்கி னணுகாது கெட்ட நடைசெல்வதற்
கல்லாக்கு நெஞ்ச மொருவா றுறினவ ராய்சுருதிச்
சொல்லா லடக்குவர் நீயெற் கவர்தந் தொடர்பருள்கல்
வில்லாளி மைந்த கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கசு

---

கசு. குறியெதிர்ப்பை இலது - பிரதிப் பிரயோசனங் கருதிக் கொடுப்பதல்லாதது; இதனை "வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங், குறியெதிர்ப்பை நீர துடைத்து" என்னுந் திருக்குறளானறிக. இக்கொடையானே புகழ்பெறல் ஒருதலையாகலின் ஊங்குள்ளார் நிற் புகழ எனப்பட்டது.

கஎ. மெய் உள் மலர்தல் - உண்மைச் சித்தத்தின்கண்ணே பரந்து தோன்றுதல்.

கஅ. மன்ற - நிச்சயமாக. முயற்சி திருவினை ஆக்கும் - முயற்சியானது பல்வகைச் செல்வத்தையும் ஒருவனுக்கு உண்டாக்கும் என்க. அவ்வாறு கூறிய நீதிமொழியாவது "முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை, யின்மை புகுத்தி விடும்" என்னுந் திருக்குறள்.

கசு. அல்லாத்தல் சுழலுதல்; இதனை "ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்க, மொருவந்தங் கைத்துடை யார்" எனவரும் திருக்குறளா

பூம்பொழி லேழும் புரந்துசெல் வாக்குப் புகழ்படைத்து
மேம்படு வாரெனி னுங்கண் மணிமெய் விபூதிசிவ
சாம்ப சிவசிவ வென்றணி யாதவர் சார்பெனக்கு
வேம்பை நிகர்க்குங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

பாத்திர ராவார் சிவஞான போதத்தின் பன்னிரண்டு
சூத்திரங் கற்றுயர் சுத்தாத் துவித துரியசைவ
கோத்திர முற்றவர் நட்பிற் கவரொடுங் கூட்டியென்று
மேத்திய மீதி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உக

ஐவளி பித்துடன் மீதொன்றொ டொன்றிக லார்ந்தசெய
லொவ்வுத லில்லா மையினோ பழவினை யுற்றதினோ
தெவ்வின நோய்பரி காரந் தெரிந்திலன் றிண்மைதந்து
மெய்வழி காட்டு கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உஉ

---

னறிக. சுருதிச் சொல் - வேத நீதிமொழி. கல்வில்லாளி - மலையை வில்லாகவுடைய சிவபெருமான் - நல்லாரிணக்கத்தினுயர்வை "நல்லாரிணக்கமு நின்பூசை நேசமும் ஞானமுமே, யல்லாது வேறு பயனுளதோ" என்னும் பட்டினத்தார் பாடலானும், "நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க,நல்லார்சொற் கேட்பதுவு நன்றே—நல்லார், குணங்களுரைப்பதுவு நன்றே யவரோ, டிணங்கி யிருப்பதுவு நன்று" என்னும் மூதுரைச் செய்யுளானு மறிக.

உ0 - பொழில் ஏழு - மேலேழுலகங்கள். பொழில் உலகமென்னும் பொருட்டுதலை "தேவர்கோ வறியாத தேவதேவன் செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை - மூவர்கோ னய்நின்ற முதல்வன் மூர்த்தி" என்னுந் திருவாசகத்தானறிக. கண்மணி - உருத்திராக்கம் - சார்பு - சிநேகம்.

உக - கோத்திரம் - சந்ததி. மேத்தியம் - சுத்தம். உற்றவர் நட்பிற்குப் பாத்திரராவார் எனக் கூட்டுக.

உஉ. வளி பித்து ஐ உடல்மீது ஒன்றொடொன்று இகல் ஆர்ந்த - வாத பித்த சேட்டுமங்கள் சரீரத்தின் மீதே ஒன்றொடொன்று பகைத்தன தெவ்வுதல் - கொள்ளுதல். திண்மை - வலிமை.

நோய்நாடி நோய்முத னாடியந் நோய்தணித் தற்குரிய
வாய்நாடி வாய்ப்பச் செயலென்ப வாய்ந்த மருத்துவனீ
யாய்நாடி னேனென் பவமுட னோய்துன் பனைத்தினையு
மேய்நாடி நீக்கு கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உங

ஒளிப்பிழம் பாகச் சடாதாரத் தாஞ்ஞை யுனைக்கண்டவ
ருளிப்பட ரத்தாழ்ப் பினுநீ யபாய முறுதுதுயர்ச்
சுழிப்படு வேன்முறை யிட்டிற் பராமுகந் தோய்தறகா
வெளிப்படல் வேண்டுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

இங்கற்ப னுனிவை செய்வன் றவிர்வ னெனவிரத
சங்கற்பஞ் செய்துந் தவறின மேற்றவ ருமையருள்
செங்கைச் சுமுக சிதம்பர மேலைச் சிகரியில்வாழ்
மின்கற் பகமே கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உரு

கருமஞ் சிதைவில தாகக்கண் ணோடவல் லார்க்குலக
முரிமை யுடைத்தென லோர்வைசின் னைந்தொழிற் கூறதுண்டோ
பொருமடி யேன்வினைப் பொம்ம லறுத்துப் பொருட்படுத்தால்
விருதரு ளாக்கொள் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

உங. என்ப - என்று கூறுவர். வாய்ந்த மருத்துவன் - மேற்கூறிய நோய்நாடன் முதலிய இலக்கணங்களமைந்துள்ள வயித்தியனென்க. பவமுடனோய் என்பதில், நோய் - என்பதனை பவநோய் உடனோய் எனத் தனித்தனி கூட்டுக. துன்பு - உயிரைப்பற்றிய பாசம். மேய் - மேவி; என்முன் வெளிவந்து என்க. இச்செய்யுள் "நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும், வாய்நாடி வாய்ப்பச் செயல்" என்னுந் திருக்குறட் கருத்து வைத்தோதப் பெற்றது.

உச. சடாதாரத்து ஆஞ்ஞை - ஆறுதாரத்துள் ஆஞ்ஞாஸ்தானம்; அது புருவமத்தியம். ஒளி - ஏழனுருபு. தகா - துவ்வீறுகெட்ட வினைமுற்று.

உரு. சங்கற்பஞ் செய்தல் - நியமனஞ் செய்தல் மேலைச்சிகரி - மேலைக் கோபுரம்.

உசூ. கருமம் சிதைவிலதாதல் - முறை செய்தலாகிய தந்தொழிலழிவிலதாதல். கண்ணோட்டம் - தன்னொடு பயின்றார் கூறியவற்றை

துச்ச விடயப் பிரவர்த் தியினிற் றுலைத்தனனுள்
சச்சந சங்கம நேய முறுதிமெய் சற்றுமிலை
யிச்சக னம்மெடுத் தென்னைபெற் றேன்முறை யோவிரங்கி
மெய்ச்சுக மீதி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உஎ

பாதக மைந்தொ டுபபா தகமும் பலபுரிந்தேன்
சோதகஞ் செய்தெனைக் கைதூக்கி யாணின் சொரூபமுணர்
சாதக மீயிற் றகாதென யாருனைச் சாற்றவல்லார்
வேதக மேய கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உஅ

நூல்கள் விலக்கிய பாவம் புரிந்துள னூற்றுப்பத்துச்
சால வெழுஞ்செயும் போதுசெய் தானபின் சாம்புமன
மோலிட் டுரைப்பிற் றிருமுன் னிழிஞர்க் கொழித்தருடன்
மேலவர் செய்கை கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உகூ

---

மறுக்கமாட்டாமையாகிய தாக்ஷணியம். இச்செய்யுள் "கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க், குரிமை யுடைத்திவ் வுலகு" என்னுந் திருக்குறளின் கருத்து வைத்தோதப் பெற்றது. பொருமுதல் - மனம் புழுங்கிப் பெருமூச்செறிதல். பொம்மல் - மிகுதி. பொருட்படுத்தால் - பொருளாக்கினால் என்க. விருது - வெற்றிச்சின்னம்.

உஎ. துச்சம் - அற்பம். சச்சநசங்கமம் - நல்லாரிணக்கம்; இது வடமொழி.

உஅ. பாதகம் ஐந்தாவன - கொலை, களவு, கள்ளுண்ணல், பொய், குருநிந்தை. உபபாதகம் - பசுக்கொலை முதலாயின. சோதகஞ் செய்தல் - சுத்திபண்ணல். வேதகம் - வேதசிரசு.

உகூ. நூற்றுப்பத்து - ஆயிரம்; அது அளவற்றமையை யுணர்த்திற்று. சாம்புதல் சோர்தல். ஓலிடுதல் - முறையிடுதல். ஒழித்தருடல் மேலவர்செய்கை என்பதனை "தன்னை யடைந்தார் வினை தீர்ப் பதன்றோ தலையாயவர்தங் கடனாவதுதான்" என்னுந் தேவாரத்தானறிக.

பஞ்சேந் திரியமு நின்வயத் தாகப் பணித்துமுன்வந்
தஞ்சே லெனுவிடிற் பாவசம் பாத்திய மாமருளி
னுஞ்சே னிலையெனில் வேறு புகலில் லுனக்கபயம்
விஞ்சேம மீதி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௩௦

ஏடுங் கிழித்தென் னிருவினை போக்கிமெய் யின்பவிற்க
பாடந் திறந்துன் பதமலர்க் கீழ்வைத்துப் பாலிப்பையோ
நீடன்பி லேனிவ் வுலகத் தவர்மெச்ச நின்னடியார்
வேடந்த ரித்தேன் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௩௧

சிசுவழச் சற்றுஞ் சகியா வனைபிணி தீரவெண்ணிச்
சுசிருசி யில்லா மருந்தை யருத்துந் தொழிலதுபோற்
பசுவருக் கங்கட் கிருவினை யூட்டிநின் பான்மைவைத்த
விசுவசிப் பாகுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௩௨

---

௩௦. பஞ்சேந்திரியம்-மெய் வாய் கண் மூக்குச் செவி. உய்ந்தேன் என்பது உஞ்சேனெனப் போலியாயிற்று. புகலில் என்பதில், இல் - இல்லை யெனப் பொருள்படுங் குறிப்புமுற்று. விஞ்சு ஏமம் - மிக்க வின்பம்.

௩௧. ஏடு - இயமதூதுவர் கொண்டு வரும் ஓலை; இது வருதலை "நாளை யோலையுந் தூதரும் வரினிவர் துணைகொலோ நவில்வாயே" என்னும் வைராக்கியசதகச் செய்யுளானறிக. மெய் இன்பம் இல் கபாடம் - உண்மையின்ப மநுபவித்தற்குரிய மோக்ஷ வீட்டின் கதவு.

௩௨. சிசு - குழந்தை. சுசி - சுத்தம். ருசி - சுவை. சுசிருசி இரண்டும் வடமொழி; புணர்ச்சியும் அது. விசுவசிப்பு - அன்புடைமை. இருவினையூட்டல் விசுவசிப் பென்பதனை "நுகரச் செய்தல் காப பது**** பார்த்திடி னருளே யெல்லாம்" எனவரும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானறிக.

புசித்துத் தொலைக்க முடியா விவன்முன் புரிந்தவினை
நசிப்பித் துதவக் குறையாத வீட்டின்ப நல்கிலையே
லசிக்கப் படுவன் பிறரா லதுநிற் கழகியதோ
விசுத்தப் படிவ கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௩௩

வினைப்போக மேயொரு தேகங்கண் டாய்வினை தானொழிந்தாற்
றினைப்போ தளவுநில் லாதென மேலவர் செப்பியபா
நினைப்போ டினும்பவஞ் செய்தலிற் சோர்வு நிகழ்ந்திலதே
மினைப்போலு மேனிக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

செய்த லுடன்படல் செய்வித்த லென்னுந் திரிவிதத்தி
னெய்தும் பவமற மூழ்கி வசித்துக்கண் டீந்துசெய்வித்
துய்திபெற் றோர்பல ரில்லை யவையுமெற் கோம்பதுன்னி
வெய்துயிர்த் தேனைக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

௩௩.. உதவக் குறையாத வீட்டின்பம் - கொடுத்தலினாற் குறைவுபடாத மோக்ஷவின்பம்; இதனை "கொடுக்கக் குறையா வீட்டின்பமாயிற் றையர் கொடுத்தகிழி" எனவரும் திருவிளையாடற் புராணச் செய்யுளானறிக. அசிக்கப்படுதல் - சிரிக்கப்படுதல். விசுத்தப்படிவம் - பரிசுத்தமாகிய திருவருட்டிருமேனி. அவன் நல்காதொழியிற் சிரிக்கப்படுதலை "வாவென் றுன், தெருளார் கூட்டங் காட்டாயேற் செத்தே போனாற் சிரியாரோ" எனவருந் திருவாசகத்தானுணர்க.

௩௪. இச்செய்யுளில் வினைப்போகமே என்பது முதல் நில்லாது என்னுந்துணையும் பட்டினத்தடிகள் பாடல். நினைப்போடுதல்-ஞாபகத்திற்கு வருதல். பவம் - பாவம்.

௩௫. பவம் - பாவம். அது மூன்று விதத்தானெய்துதலை" விரைவொடு செய்த லேசெய் வித்தலே யுடன்பா டென்ன, வருமுறை பாவமோடு புண்ணிய வழக்க மாமே" என்னும் சூடாமணி நிகண்டுச் செய்யுளா னறிக. மூழ்கல் - தீர்த்த ஸ்நானஞ் செய்தல். வசித்தல் - ஸ்தல வாசம் பண்ணல். காண்டல் - மூர்த்தி தரிசனம் பண்ணல். ஈதல் - தானஞ் செய்தல். செய்வித்தல் - பொருள் கொடுத்துப் பிறரான் மேற்கூறியவைகளைத் தமக்காகச் செய்வித்துக் கொள்ளுதல். வெய்துயிர்த்தல் - பெருமூச்செறிதல்.

குதவருத் தங்கெடுத் தாண்டனை யென்னை குறித்தப்பனே
யுதவி வரைத்தன் றுதவி யுதவி செயப்பட்டவர்க்
கதுவிய சால்பின் வரைத்தெனும் பாவைக் கருதியன்று
விதவடி யேற்குக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௨௬

பரதுக்க துக்க சொயதுக்க பாரமெற் பற்றினதீர்
பிரதக்கிணநமக் காரந் தளிபுகல் பேசனின
சரிதச் சிரவணம் பூசை தியாந சமாதிமுனும்
விரதக் கிகலாக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௨௭

கண்ணு யிரமுனக் காயிரம் வாய்திருக் காதுருமூக்
கெண்ணு யிரமா யிரமா யிரமென வேத்துமறை
யொண்ணு வளக்க வுனதியல் பென்சோர் வுணர்ந்திலையென்
விண்ணுடர் போற்றுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

௨௬. குதவருத்தம் - மூலநோய். அன்று - எதிர்மறைப்பொருளில் வந்த அஃறிணை யொருமைப்படர்க்கை வினைமுற்று. வித என்பதற்கு விபரித்துச் சொல்வாயாக என்பது பொருள்; விதப்பு - விபரம். இதனை, "விபரமு நடுக்கமு மிகுதியும் விதப்பே" என்னும் பிங்கலந்தைச் சூத்திரத்தானறிக. இச்செய்யுள் "உதவி வரைத்தன் றுதவி யுதவி, செயப்பட்டார் சால்பின் வரைத்து" என்னுந் திருக்குறட் கருத்து வைத்தோதப்பெற்றது.

௨௭. பரதுக்க துக்கம்-பிறர்க்கு நேர்ந்த வருத்தங்குறித்துத் தான் வருந்துவது; இதனை "சோதி வதனம் பரதுக்க துக்க வுளத்தால் வாடியதும்" என்னும் விநாயகபுராணச் செய்யுளானறிக. சொயதுக்கம் - தனக்கு நேர்ந்த வருத்தம். பாரம் - சுமை. விரதக்கு இகலா எற்பற்றின தீர் - விரதங்கட்கு விரோதமாக என்னைப் பீடித்தன அவைகளை நீக்கியருள் என்க; இகலாக என்பதில் ஆக என்னும் வினையெச்சத்தீறு தொக்கது. தளி - கோயில். சரிதம் பேசல்-சரித்திரங்களைப் படித்தல்; பேசலென்பதோடு சரிதம் என்பதனை எடுத்துக்கூட்டுக. சிரவணம் - கேட்டல். பிரதக்கிண மென்பதுமுதல் சமாதி என்பதுவரையுமுள்ள திரிகரண வழிபாட்டுடனும் நின என்பதனைக்கூட்டுக.

௨௮. ஆயிரம் என்றது அளவின்மைப் பொருட்டு; கோடானகோடி என்றாற்போல. வேதம் இவ்வாறு எத்துதலை "ஸஹஸ்ராக்ஷாய"

முன்செய்த தீவினைக் கிடாய் நுகர முயங்குதுன்புக்
கஞ்சின னூல்விதி சாந்தியை யாற்றவு மாற்றலிலே
னென்செய்வ னின்னருட் குத்தகு மோகண் டிருப்பதுசொன்
மின்செய்த வேணிக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௩௯

ஆகா மியஞ்சஞ் சிதமற மற்றொன் றருத்திமெல்லத்
தேகாதி மூன்றுஞ் சிவார்ப்பண மாக்கச் சிவகுருவாய்
வாகா தமிய னுயிர்க்குயி ராய்த்தவ மாகலத்தின்
மீகாம னாகுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௪0

---

என்னும் எசுர்வேதருத்ர வாக்கியத்தானும், "ஸஹஸ்ர சீர்ஷாபுருஷஸ் ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ரபாத்" என்னும் சுவேதாச்சுவதரோபநிஷத்து வாக்கியத்தானும் கடவுளியல்புகள் அளக்க வொண்ணாவென்பதை "ஞானந்தானுரு வாகிய நாயக னியல்பை,யானு நீயுமா யிசைத்துமென் றாலஃ தெளிதோ, மோனந் தீர்கலா முனிவருந் தேற்றிலர் முழுதுந், தானுங் காண்கில னின்னமுந் தன்பெருந் தலைமை" என்னுங் கந்த புராணச் செய்யுளானறிக.

௩௯. நூல் விதி சாந்தி - சாத்திரத்தின் கன்ம காண்டம் விதித்த பரிகாரங்கள்.

௪0. ஆகாமியம், சஞ்சிதம் என்பன மூவகைக் கன்மங்களுள் இரண்டு; இவற்றுள் முன்னையது, பிராரத்துவத்திற் கிசையவெடுத்த தேகத்தில் அது புசிக்கப்படும் பொழுதே ஆன்மா விருப்பு வெறுப்புக் களால் தான் செய்து கொள்ளும் புண்ணியபாவங்கள். பின்னையது, அவ்வான்மா அநாதி தொடங்கிச் சநநங்கடோறும் ஆர்ச்சித்தனவாய வினையுட் புசித்தனபோகப் புசிக்க வேண்டியனவாய் எஞ்சிநின்றவை கள். மற்றொன்று என்றது இங்கே பிராரத்துவத்தை; எதனாலென் னில் கன்மமூன்றனுள் முன்னர்க் கூறப்பட்ட விரண்டொழிய எஞ்சி யது அதுவேயாகலான். மெல்ல அருத்தி எனப்பிரித்து தாக்காமல் இலகுவாகப் பிராரத்துவத்தை யுண்பித்து எனப் பொருள்கொள்க. குருகடாக்ஷத்தான் முற்கூறிய இரண்டும் அருந்தாமலே அற்றொழி தலையும், பிற்கூறிய ஒன்று மெல்ல அருந்தி யொழிதலையும் "அரும் பருவ மடைதலுமே யாசா னாகித், தோன்றிநுக ராதவகை முற்செய் கன்மத் துகளறுத்தங் கத்துவாத் துடக்கறவே சோதித், தேன்ற

பிராரத் துவமவ் வுடலோ டழிமென்பர் பிறபவமேல்
வராதிற் றிடிலோ வதற்கது வந்து வதைக்குமுனைப்
பராவுற் றனன்பவம் பற்று தினியொரு பாயஞ்செய்தி
விராவுற் றவிபோ கலங்காத கண்டவென் விண்ணப்பமே. சக

செய்யத் தகாச்செயல் பேதைமை யான்முன் செயூப்பினினைந்
துய்யக் கழுவா யுணரா துனைநினைந் தோம்பென்றுள
ளையும் பொழுதினும் மற்றொரு தீவினை நாடிற்றுண்டோ
வெய்யவெற் குய்வு கலங்காத கண்டவென் விண்ணப்பமே. சஉ

---

வுடற் கன்மமனு பவத்தினு லறுத்திங் கினிச்செய்கன்ம மூலமல ஞானத்தா லிடிப்பன்" என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தா னறிக. தேகாதி மூன்று = உடல் பொருளாவிகள். கலம் - கப்பல். மீகாமன் - மாலுமி. தேகாதிமூன்றும் பக்குவமுதிர்ச்சியிற் சிவார்ப்பண மாமென்பதனை "அன்றே யென்றனுவியு முடலு முடைமை யெல்லாமுங், குன்றே யனையா யென்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ" எனவருந் திருவாசகத்தானறிக.

சக. அவ்வுடல் = பிராரத்துவமாகிய தன்னை முகந்து கொண்டு தோன்றிய அந்தச் சரீரம் என்க. அழியும் என்னும் முற்றுச்சொல், அழிம் என வந்தமை "செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலுஞ், செய்யுளு ளும்முந் தாகலு முற்றே, லுயிரு முயிர்மெய்யு மேகலு முரித்தே" என்னும்நன்னூற் சூத்திரவிதியாலெனவறிக. அதற்கு அது வந்து வதைக்கும் - இனிவருவதாகிய அவ்வுடற்கும் அப்பிராரத்துவ வினை ஏற்பட்டுத் துன்புறுத்தும் என்க. பவம் = பிறவி. விபோ - எங்கும் நிறைந்தவனே யெனப் பொருடரும் வடமொழிச் சம்போதகம்.

சஉ. செயூ- செய்து எனப்பொருள் பட்டுவரும் செய்யூ என்னும் இறந்தகாலத் தெரிநிலைவினை வினையெச்சச்சொல்; அது இங்கே இடைக்குறைந்து நின்றது. கழுவாய் = பிராயச்சித்தம். உள்ளம் நாடிற்று என முடிக்க.

தினைவரைப் போதுமுன் சேவடிக் கன்பு செயாதுபவம்
பிணைவராற் கேதவ் வினையென் றிரங்குமிப் பேதைக்கன்ப
ரனைவரு மொப்ப வவாவெறுப் போட்டி யடைப்பதென்றோ
வினைவரு வாயைக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. சங

வினையா லுடலு முடலால் வினையும் விளைந்துவிளைந்
தெனையா தனைசெய வுய்வழி காட்டா திருத்தியெற்குப்
பினையார் துணைநினை யல்லா லவற்றைப் பெயர்த்தருளாய்
வினையா தரித்தி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. சச

அபத்தியஞ் செய்து பிணிபொன் றிலதென் றவுடதத்தை
யுபத்திர வத்தி னுவர்ப்பாரின் வேத மொதுக்கியதீ
தபத்தம் புரிந்தும் விரைந்தரு ளாமைக் கடிவெறுத்தென்
விபத்தை விலக்கு கலங்காத கண்டவென் விண்ணப்பமே. சரு

---

சங. வரை - அளவு. வினைவருவாய் - வினைவரும் வழி.

சச. யாதனை - கடுந்துன்பம்; இதனை "யாதநா தீவ்ர வேதநா" என்னும் வடமொழி அமரவாக்கியத்தா லுணர்க. ஆள்வினை - முயற்சி. வினையா லுடலும் உடலால்வினையும் விளைதலை "உடற்செயல் கன்ம மிந்த வுடல்வந்த வாறே தென்னின், விடப்படு முன்னு டம்பின் வினையிந்த வுடல்விளைக்குந், தொடர்ச்சியா லொன்றுக் கொன்று தொன்று தொட்டநாதி வித்தி, னிடத்தினின் மரம ரத்தின் வித்தும்வந் திடையு மாபோல்" என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானும் "படர் தரும்வெவ் வினைத்தொடர்பாற் பவத்தொடர்பப் பவத்தொடர்பாற் படரா நிற்கும், விடலரும்வெவ் வினைத்தொடர்பவ் வினைத்தொடர் புக் கொழிபுண்டே வினையேற் கம்மா, விடர்பெரிது முடையேன்மற் றென்செய்கே னென்செய்கே, னடலரவ மரைக்கசைத்த வடிகேளோ வடிகேளோ;" என்னுஞ் சிதம்பரச்செய்யுட் கோவையானுமறிக.

சரு. உவர்த்தல் - வெறுத்தல். அபத்தம் - பொய். விபத்து - ஆபத்து.

புண்ணிய பாவ மிரண்டு முயிருடன் போமெனினும்
பண்ணினன் பாவநின் பேரெண் ணினனவை பாற்றுமழ
லுண்ணிய புக்கிடில் விண்மிசை யிந்தன மும்மொழியும்
விண்ணிலர் போற்றுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

தமோகுண மேலிட் டவம்புரிந் தேனுநிற் சார்ந்துநமோ
நமோநம வென்றலிற் போயின பாவ நசஞ்சயமே
சமோதவ னத்து ளழுந்தும் படிசெய் சகசமல
விமோசன மீந்து கலங்காத கண்டவென் விண்ணப்பமே. சஎ

ஒழுக்க முளாரினுஞ் செல்வரைப் பூவோ ருபசரிப்பர்
வழுக்கிற் பொருளுப சாரமு மஃதொடு மாயுமற்றை
யொழுக்கம் விழுப்பந் தரலா லதனி னுயர்ந்துயிர்க்கு
விழுக்கல னாகும் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. சஅ

---

சகூ. புண்ணியபாவ மிரண்டும் உயிருடன் போமென்றலை 'அர்த்தா க்ரஹெ நிவர்தந்தெ ஸ்மசாநெ மித்ர பாந்தவாஃ - சுகிர்தம் துஷ்கிருதஞ் சைவ கச்சந்த மநுகச்சதி" என்னும் நீதிசாஸ்திர சுலோகத்தானும் "அத்தமும் வாழ்வு மகத்துமட் டேவிழி யம்பொழுக, மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி விம்மியிரு, கைத்தல மேல்வைத் தழுமைந் தருஞ்சுடு காடுமட்டே, பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே" என்னும் பட்டினத்தார் பாடலானுமறிக. பேர் - திருநாமம். எண்ணுதல் - ஜபித்தல். பாற்றுதல் - அழித்தல். உண்ணிய - உண்ண. இந்தனம் - விறகு. விண் நிலம் - தேவலோகம். இச்செய்யுள் "விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழ, லுண்ணிய புகிலவை யொன்று மில்லையாம், பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை, நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே" என்னுந் தமிழ்வேதக் கருத்து வைத்தோதப்பெற்றது.

சஎ. அவம் - தீமை. நசஞ்சயம் - சந்தேகமின்மை; தெளிவு என்றபடி. சமோதவனம் - பேரின்ப சமுத்திரம் என்க; சம் - சுகம்; ஓதவனம் - சமுத்திரம். சகசமல விமோசனம் - ஆணவமல நீக்கம். மேற்காட்டியவை யெல்லாம் வடமொழிகள்; புணர்ச்சியும் அது.

சஅ. பூவோர் - உலகத்தவர். பொருள் வழுக்கில் - பொருள் நிலை தவறுமாயின் என்க; முற்ற அழி வெய்தாமல வியாபாரலேவாதேவி

குற்றத்தை நீக்க விசைந்தில துள்ளங் குணர்ச்சிதத்தி
லெற்றைக் குறுவ தருட்கிலக் காவது மென்றுகொலோ
மற்றத்தை யெப்படி பான்வச மாக்கல் வலிந்ததிலுன்
வெற்றிப் பதம்வை கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௪௯

சிற்ப விதிப்படி செய்யா வுருவினுஞ் சேர்ந்துகொண்டா
யற்பினர் பூசையைக் கோடியஃ தேபோ லறிஞர்சொலும்
பற்பல பாவெனப் பாமர ஞன்சொலிப் பாவினையும்
விற்பந நாத கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௫௦

---

வகையால் முதலுக்குப் பெரும்பாலும் குறைபாடு வருமேல் அதற்குத் தக வுபசாரமுங் குறைதல் காட்சியி னிகழ்தலின் இங்கே ஒழியினென்னு துவழுக்கின் என்னுஞ் சொறபிரயோகஞ் செய்ததெனவறிக. மற்றை ஒழுக்கம் விழுப்பம் தரலால் - பொருளை யொழித்து ஒழிந்த ஒழுக்கமானது சிறப்பினைத் தருதலால், அதனின் உயர்ந்து உயிர்க்கு விழுக்கலன் ஆகும் - அப்பொருளைக் காட்டினுந் தான் உயர்வுற்றுச் சீவர்களுக்கு மேம்பட்ட ஆபரணம் ஆகும் என்க. "ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க, முயிரினு மோம்பப் படும்" என்னுந் திருக்குறள் இங்கே சிந்திக்கற்பாலது.

௪௯. மற்று - அசைச்சொல். அத்தை - அவ்வுள்ளத்தை என்க; அது என்னும் சுட்டுப் பெயர் உருபேற்று விகாரம் பெற்றிவ்வாறு வந்தது. "பொன்னுக வின்னும் புகல்கின்றேங் கேளித்தை" என வந்தாற் போல அதில் - அவ்வுள்ளத்தின்மீதென்க.

௫௦. சிற்பம் - சிற்பசாஸ்திரம். சேர்தல் - இங்கே சாந்நித்தியராயுறுதல். பாமரன் - அறிவீனன். விற்பநநாதன் - கற்றவர்தலைவன். பூசையைக் கொண்டாய் எனவும் பாவினைக் கோடி எனவும் கூட்டுக. சிற்பவிதிப்படி செய்யப்படாத உருவின் கண்ணுஞ் சாந்நித்தியராய் அன்பர்களுடைய பூசையை எம்பெருமான் ஏற்றுக்கொள்ளுதலை "சிற்பநூல் வழியிற் செய்த வுருவெனச் சிறப்புஞ் சாராப், புற்பொருளுருவுமைங்கைப் புண்ணியன்புணர்ந்து நிற்பன்" எனவும் "நலங்கிளர் முனிவினை நண்ணலு மாங்கோ, ருலங்கொடு வைத்தொரு கொம்பின னென்றே. யலங்கிய தீம்புன லாட்டி நறுந்தே, னிலங்கலர் தூய்ப் பணிந் தேத்திய கன்றான்" எனவும் வரும் விநாயகபுராணச் செய்யுட்

நச்சப் பெருமித மீபு நின் னுயிர நாமத்துளே
துச்சொப் பநநா சனனென் றொருபெபர் துன்னுமெனக்
கச்சொப் பனமணு காவகை காத்தி யபரபர
விச்சைச் சொரூப கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௱௧

மாணுப் பொருளொடு துச்சொப் பனந்துயின் மன்னினின்றாள்
பூணுத் தரிப்பவர்க் குண்டோ பெருமைசொல் பூரணனீ
காணுப் பொருளில் கடிக வதனைக் கரணமெலாம்
வீணுக் கினது கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௱௨

கண்டன வாய விருதிணை யுள்ளே கழிந்தவுமின்
றுண்டென நின்றவுந் தூங்கியுஞ் சேரச்செய் தோரிடத்திற்
கண்டன கேட்ட தொழிற்படுத் தோவுங் கனுநிலைமை
விண்டு விலக்கு கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௱௩

---

களானறிவதோடு, உலகத்தில் அனைவரும் இற்றைஞான்றும் மஞ்சள் சந்தனம் கோமயம் அக்ஷதை முதலியவற்றுளொன்றைத் திரட்டி வைத்து அதில் ஆவாகநாதி செய்து பூசித்து இஷ்டசித்திகளையடையுங் காட்சியானுமறிக.

௱௧. நச்சுதல் விரும்புதல். பெருமிதம் - மேம்பாடு. துச்சொப்பந நாசனன் - கெட்ட கனவை வாரா தொழிப்பவன் "துச்சொப்பந நாசாயநம:" என்பது விநாயக சகஸ்ரநாமத்துளொன்று. விச்சை - வித்தை. அபரவித்தை - வேத வேதாங்கங்கள். பரவித்தை - சிவாகமங்கள்.

௱௨. மாணுப்பொருள் - இழிந்தபொருள். இல் - இல்லை எனப் பொருள்படும் குறிப்பு வினைமுற்றுச்சொல்; "வழியெஞ்ச லெஞ்ஞான்றுமில்" எனத்திருக்குறளில் வந்தாற்போல. கடிக - நீக்கியருள்க வென்க. கரணம் - அந்தக்கரணம்.

௱௩. இதன் பொருள் - கண்டன ஆய இருதிணை உள்ளே கழிந்தவும், இன்று உண்டு என நின்றவும் தூங்கியும் ஓர் இடத்திற் சேரச் செய்து - காணப்பட்டனவாகிய உயர்திணை யஃறிணைகளுள்ளே இறந்தொழிந்தனவும் தற்காலத்துள வென்னும்படி சீவித்திருக்கின்றனவும் உறங்குவோனும் ஆகிய இவர்களை (அவரவருறைவிடத்தைவிட்டு மற்

ஆன்மா வவத்தையைந் திற்பட் டலைந்த ததுமுறையோ
தான்மாற வேறலுஞ் சாக்கிர மாதியிற் றத்துவங்க
ளேன்மா றொடுங்கலுஞ் சிவ னியல்பு மிலக்கியருண்
மேன்மா தவருள் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௫௪

முகவிழிக் கெண்மைத் துலக விடய முயன்றுசெய்வர்
சகலரு மேனு மதிற்பலர் மந்தர் சதுரர்சில
ரகவிழிக் கும்மரு மந்தரி யாமியை யாய்ந்தடைந்தோர்
மிகவு மரியர் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௫௫

---

ரூரிடத்துற்றனராக உறங்குவோ னெண்ணும்படி) ஒரு இடத்தில் சேரச் செய்து; கண்டன கேட்ட தொழிற் படுத்து - செய்துகைகண் டனவும் கேட்டனவுமாகிய இருவகைத்தொழில்களையுஞ் செய்வித்து; ஓவும் சனு நிலைமை - (பின்பு சாக்கிரத்திலில்லை யென்னும்படி) ஒழி கின்ற சொப்பனாவத்தையை; விண்டு விலக்கு - (இது இதனாலாவது இது செய்யினொழியு மென்று) சொல்லி யொழித்தருள்வாயாக என்றவாறு. உயர்திணையாவார் - மனிதர். அஃறிணையாவன - விலங்கு, பறவை, மரம், மலை, கடல் முதலியன. தூங்கி - உறங்குவோன்; இது வினையாலணையும்பெயர். கைகண்டனவாயதொழில்- அருந்தல் பொருந் தல் முதலியன. கேட்கப்பட்டனவாய தொழில் - ஆகாய கமனம் முதலியன. கேட்டனவாய தொழிற்படுத்தலை "காதறரு முருவி துவான் பறத்தலின்றூங் கதற்கியல்பாய்க் காண்டலானும்" எனவரும் கொலை மறுத்தற் செய்யுளானறிக.

௫௪. அவத்தை ஐந்தாவன - சாக்ரம், சொப்பனம், சுஷுப்தி, துரியம், துரியாதீதம். தான் - அசை. இலக்கி மாற அருள் எனக்கூறி, விளக்குவித்து அவற்றாலாய துன்பமுழுதும் ஒழியும்படிக்கநுக்ரகம் பண்ணுக என்க. ஏறல் - பிரவர்த்தி. ஒடுங்கல் - நிவர்த்தி. ஏலுமாறு - இயன்றபடி; இது இலக்கணவிதியால் ஏன்மாறெனவாயிற்று; இதனை ஏறலொடுங்க லிரண்டற்கு மொட்டுக. மாதவர் உள் - மஹரிஷிகள் தியானிக்கின்ற என்க; உள் - வினைத்தொகை.

௫௫. முகவிழி - ஊனக்கண். எண்மைத்து - எளியதன்மைத்து. சதுரர் - சமர்த்தர். அகவிழி - ஞானக்கண். அந்தரியாமி - உள்ளீடாயிருப்பவன்.

இம்மை மறுமைமெய் வீட்டினு மொன்றினென் றேற்றமிகு
மும்மை வழியின் முதறெரிப் பார்பலர் மொய்த்துளர்கா
ணம்மை தெரிப்பார் சிலர்வீ டுணர்த்து மவரரியர்
மெய்ம்மை தெரித்தி கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

மேற்றம் பொருள்புகழ் காலம் வியர்த்தத்தை மேமெனவோர்ந்
தாற்ற விருந்துமின் னாமைசெய் தார்ச்செய வஞ்சினரைத்
தோற்றன ரென்றார் சிலர்வினைத் துக்க சுகமுய்ப்பநீ
வீற்றிருப் போரார் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

பேறிழ வின்பம் பிணிமூப் பிறப்பெனப் பேசுகின்ற
வாறுங் கருவி லமைந்ததென் னார்சில ரக்கவட
நீறு நியதி யுடையாரை யேசினர் நீசரவர்
வீறு தணித்தி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௫௮

உயரிய நூல்பொன் பொருளை யுடையர்க் குருவென்றன
வயலவர் போக்கிய போகத்தின் மாட்சிக் கழுக்கறுத்து
மியலு மளவுமின் னாமைசெய் தார்க்கவை யேறினவே
வியனிலத் தென்னை கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௫௯

---

௫௬ மும்மைவழியின்முதல் - மேற்கூறிய மூன்றுவழியுள் முற்கூறிய இம்மை.

௫௭. மேல் என்றது - இங்கே எதிர்காலத்தை. காலம் - சத்காலக்ஷேபகாலம். வியர்த்தம் - வீண். மேம் - மேவுமென்பது மேமெனவந்தது; முற்றுச்சொல். இன்னாமை - தீமை.

௫௮ அக்கவடம் - உருத்திராக்கமாலை. நியதி - பூசை. வீறு - செருக்கு. ஆறும் கருவிலமைந்ததென்பதனை "பேறிழ வின்ப மோடு பிணிமூப்புச் சாக்கா டென்னு, மாறுமுன் கருவுட் பட்டது" என வரும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானும், "இந்நாளி லின்னவனுக் கின்னபடி யென்றுதலை, முன்னா னெழுதினவன் மூடனா—அன்னாய் கேள், பேறிழ வின்பம் பிணிமூப்புச் சாக்காடென், றாறுங் கருவி லமைப்பு" எனவழங்கும் ஔவையார் தனிப்பாடலானும் அறிக.

௫௯. இதன்பொருள்—உயரியநூல் - உயர்ந்த நீதிநூல்கள். பொருளை உடையர்க்கு பொன் உரு என்றன - பிறராக்கங்கண்டுழிப்

நன்றியில் செல்வம் படைத்தார் சிலர்தமை நன்குமதித்
தின்றது கொண்டறஞ் செய்தன ரீட்டக மீயுமற
மொன்றின்மற் றென்று கழிக்கப் படாதுண ராரிரண்டு
மென்றருந் திற்போங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

சந்தித் தெனையுன் னருட்பார்வை தந்து தழால்புரிந்தென்
புந்திக் கிலேசமுங் காயக் கிலேசமும் போக்கிலையேல்
வந்திப்ப தெப்படி வாழ்த்துவ தெப்படி மானின்னர
விந்தக் கழலைக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௨௧

---

பொறுமைப்படுவார்கட்கு செல்வங்கள் தங்கா என்று விதித்தன; (அவ்வாறிருக்க) வியல்நிலத்து - பரந்தநிலவுலகத்தின்கண்ணே, அயலவர் போக போக்கிய மாட்சிக்கு அழுக்கறுத்தும் - பிறர்களுடைய போக போக்கிய மேன்மைக்குத் தாம் மனம்பொறாது புழுங்கியும், (அம்மட்டிலமையாமல்) இயலும் அளவும் இன்னாமை செய்தார்க்கு அவை ஏறினவே - தம்மான் முடிந்தமட்டிலும் தீமையுஞ் செய்துள்ளார்க்கு அச்செல்வங்கள் மேன்மேலுயர்ந்தனவே; என்னை - இதற்குக் காரணம் என்னையோ? என்றவாறு. சொல்லியருளுக என்பது குறிப்பெச்சம். நூல்விதிக்குமாற்றை "அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம், பேணா தழுக்கறுப் பான்", "அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ, டவ்வையைக் காட்டி விடும்", "அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத், தீயுழி யுய்த்து விடும்" என்பன முதலிய திருக்குறள்களா னறிக

௨௦. நன்றியில் செல்வம் - அறத்தாறீட்டப்படாத பொருள். ஈட்டு அகம் - நியாயமின்றிச் சம்பாதித்தலாலுண்டாய பாவம். ஈயும் அறம் - அதனைத் தற்காலத்தீதலாலுண்டாய புண்ணியம். இரண்டும் மென்று அருந்திற்போம் - தீவழியீட்டுமாற்றாலுண்டாய பாவமும் அதனையிப்பொழுதீயுமாற்றாலுண்டாய புண்ணியமும் ஆகிய இரண்டும் அவ்வவற்றிற்குரிய துக்கசுகங்களை யனுபவித்தலினாலே தீரும் என்க.

௨௧. தழால் - தழுவுதல். புந்திக்கிலேசம் - மனவருத்தம். காயக்கிலேசம் - சரீரவருத்தம். மான் - மஹான் என்னும் வடமொழி இவ்வாறு வந்தது; இதனை "மானேயுன் னருள்பெறுநா ளென்றென்றே வருந்துவனே" என்னுந் திருவாசகத்தானும், "மானிடத்தின்வருமைந்

ஒன்றினைச் செய்திடல் செய்யா தொழிதன்மற் றொன்றுசெய்த
லென்ற திரிகத் திருத்துவ னீயென் றியானறிவேன்
றொன்று புரிவினை சுட்டிக் கழியா தருள்கசுக
மின்றிகழ் வேணிக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௬உ

முக்கல மாதவன் சேவையி னுற்பிணி முற்றுமற்றுத்
தக்கன் பரபதஞ் சார்ந்தன னன்பர் தரிசனமே
பக்குவந் தந்திடு மெவ்வழி யாயினும் பாலனஞ்செய்
மிக்கவர் போற்றுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௬௩

போத்திர்த் துவத்துட னுவை யுயிரின் பொருட்டதிலே
யார்த்தி நினக்கிலை யந்த ரகசிய மாரறிவார்
சார்த்த வினையுயிர்க் குக்கத் திருத்துவஞ் சார்திமதி
மீத்தவழ் வேணிக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௬௪

---

தன்" என்னுங் கந்தபுராணத்தானும் அறிக. அரவிந்தக்கழல்-தாமரை மலர்போன்ற திருவடிகள்.

௬உ. ஒன்றினைச்செய்திடல் - கர்த்திருத்துவம்; செய்யாதொழிதல் - அகர்த்திருத்துவம்; மற்றொன்றுசெய்தல் - அந்நிதாகர்த்திருத்துவம்; இம்மூன்றுந் திரிகர்த்திருத்துவம் எனப்படும்; இதனை "ஒன்றினைச் செய்கை செய்யா தொழிகைமற் றொன்றுசெய்கை, யென்றிவை யுடையோன்" என்னுந் திருவிளையாடற்புராணச் செய்யுளானும் "ஒன்றை யாக்கிட வொன்றினை யழிக்கவொன் றினைவிட், டொன்றை வேறற வுயர்த்தவும் வல்லவ னுவனே" எனவரும் விநாயக புராணச்செய்யுளானும் அறிக. தொன்று புரிவினை சுட்டிக்கழித்தல் - பண்டைவினையைக் குறித்துக்காட்டி ஒதுக்குதல்.

௬௩. முக்கலமாதவன் - விநாயகபக்த சிகாமணியாகிய ஓரிருடி. தக்கன் - வல்லவராஜ குமாரன்.

௬௪. போத்திர்த்துவம் - போகநுகர்ச்சிக்கு வினைமுதலாதற் றன்மை. ஆர்த்தி - ஆசை. கத்திருத்துவம் - நுகர்வித்துக் கர்த்தாவாய்நிற்கும் நிலைமை. உயிர்க்கு வினை சார்த்த-உயிர்கட்கு வினைப்பயன் களைச் சாரச்செய்ய என்க.

அடங்கா வெனக்குண் மனமும் பொறியு மறன்கடையே,
தொடங்காப் புகுவித் தெனேவச மாக்கின தொன்றுதொட்டென்
னுடங்காச் சனித்த வுவைநல் வழிச்செல வுய்த்தொறுக்காய்
விடங்கா சடங்கா கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௬௫

சத்திய நின்பெயர்ச் சோடசஞ் சாற்றுபு தாரணியோ
ரெத்தொழிற் கண்ணு நினையெழு வாயிடை யெண்ணுவரே
லித்தொழி னிர்விக் கினத்தின் முடித லநுபவமாம்
மெய்த்தவர் போற்றுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

அறந்தா னியற்று மவனினுங் கோடி யதிகமில்லந்
துறந்தா னெனவுமிற் றுன்னினர் பேறு சுவர்க்கமென்று
மறைந்தன நூலுனை யில்லிருந் துள்குந ரார்வதின்றே
விரைந்துயர் வீட்டைக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

௬௫. அறன்கடை - பாவம். தொடங்கா - செய்ய ஆரம்பித்து என்க. என் உடங்காச் சனித்த - என்னுடன் கூடப்பிறந்த. ஒறுத்தல் - அடக்குதல். விடங்கன் - ஸ்வயம்புமூர்த்தி. சடங்கன் - ஹிருதயாதி ஆகம சடங்கமந்திரங்களை யுடையான், சிக்ஷாதி வேதசடங்கங்களை யுடையான்எனினும் அமையும். மனத்தை அடக்குவதரிது என்பதனை "சிந்தையை யடைக்கியே சும்மா விருக்கின்ற திறமரிது" என்னும் தாயுமானசுவாமி பாடலானறிக.

௬௬. சோடசப்பெயர் எனமாறி, பதினாறு திருநாமங்கள் என்க; அவை - சுமுகர், ஏகதந்தர், கபிலர், கசகன்னர், இலம்போதரர், விகடர், விக்நராசர், கணதிபர், தூமகேது, கணத்தியக்கர், பாலசந்திரர், கசாநநர், வக்ரதுண்டர், சூர்ப்பகன்னர், ஏரம்பர், கந்தபூர்வசர் என்பனவாம். எழுவாய் - ஆரம்பம்.

௬௭. நூல், இல்லைத் துறந்தார் அதனைத் துறவாதவரினும் கோடி பங்கு விசேடமுடையர் என்பதை, "அறந்தா னியற்று மவனினுங் கோடி யதிகமில்லந் துறந்தான்" என்னும் பட்டினத்துப்பிள்ளையார் பாடலானும், இல்லறவாழ்க்கையாளர் மறுமையிற் பெறுவது சுவர்க்க மென்பதை "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந், தெய்வத்துள் வைக்கப் படும்" என்னுந் திருக்குறளானு மறிக.

இல்லிருந் துன்னை மறவா திருத்து மெனிலதற்கோ
ரல்லலுளாதென் னெனின்மனைக் கன்மத் தகம்புகுத்த
லில்லை யெனினுல கப்பழி யாநெஞ்சவ் வேல்லைவுனை
மெல்ல நழுவுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௬௮

கண்ணிரண் டோர்பொரு ளைக்காண் பதுபோற் கருத்தொத்து
பெண்ணொடின் மேவிக் குருலிங்க சங்கமம் பேணிக்கதி [லாம்
யெண்ணிலர் நண்ணின ரவ்வுறு மேலுயர் வில்லறமும்
வெண்ணக வாச கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௬௯

௬௮. மனைக்கன்மம் - கிருகத்திற்குரிய தொழில். பழி ஆம் - பழிச்சொல் உண்டாகும்; அது உண்டாதலை "பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந் - தாள்வினை யின்மை பழி" என்னுந் திருக்குறளானறிக.

௬௯. இதன் பொருள்:—இரண்டு கண் ஓர் பொருளைக் காண்பது போல்-இரண்டு கண்களும் ஒருபொருளைத் தம்முளொத்துக்காணுமாறு போல, கருத்து ஒத்து உலாவும் பெண்ணொடு - கணவன தபிப்பிராயத்துக்கு மாறுபடாமல் உடனுகின்று உரிய இலக்கணங்களோடுலாவப்பெற்ற மனைவியோடு, இல்மேவி - கிருகத்திலிருந்து, குரு லிங்கம் சங்கமம் பேணி - ஆசாரியர் சிவபெருமான் அடியவர்கள் என்னும் இம்மூவர்களுடைய வழிபாட்டைக்கைக்கொண்டு, கதி நண்ணினர் எண்ணிலர் - மோக்ஷத்தை யடைந்தவர் அநேகர், அவ் உறுமேல் இல்லறமும் உயர்வு-மனைவியும் பேணுகையுமாய அவைகளை வாய்க்கப்பெறுமாயின் இல்லறதன்மமும் ஏனைத் தன்மங்கள்போன் றுயர்வுடைத்தாமென்றவாறு. கண்ணுவமைக் கொத்தொழுகுதலை "காதன் மனையாளுங் காதலனு மாறின்றித் தீதி லொருகருமஞ் செய்பவே - யோதுகலை, யெண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்கன்றே, கண்ணிரண்டு மொன்றையே காண்" எனனும் நன்னெறிச் செய்யுளானும், உரிய விலக்கணங்களோடுலாவுமாற்றை "கார்யேஷு தாஸீ கரணேஷு மந்த்ரீ - ரூபேஷு லக்ஷ்மீ க்ஷமயா தரித்ரீ - ஸ்நேகேஷு மாதா சயநேஷு வேச்யா - ஷட்கர்ம நாரீ குலதர்ம பத்நீ" "அன்னை தயையு மடியாள் பணியுமலர்ப், பொன்னி னழகும் புவிப்பொறையும் - வன்னமுலை, வேசி துயிலும் விறன்மந் திரிமதியும், பேசி லிவையுடையாள் பெண்" என்னும் நீதிசாஸ்திர சுலோகம

மதிநுட்ப நூனுட்ப மோடுடை யார்க்கெதிர் மன்னிநிற்கு
மதிநுட்பம் யாவுள வென்ற சுருதி யவைநினருள்
பதிபொற்பி னல்வரும் பண்ணடி யேற்கும் பரம்பரையில்
விதியுற்ப நர்க்குங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௭௦

பூவாதே காய்க்கு மரமுள போன்மெனப் புண்ணியத்தா
லேவாதே நின்றுணர் மக்களை யெய்திவைத் தில்லறத்தின்
மூவாமு னல்லறஞ் செய்துனை யோகின் முயங்குதலை
மேவ்வார் பெறலென் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௭௧

---

அதன் மொழி பெயர்ப்பு வெண்பாக்களானும், உரியவிலக்கணமின் மையை 'விவாத சீலாம் ஸ்வயமர்த்த சோரிணீம், பரானுகூலாம் பரிஹாஸ பாஷிணீம், அக்ராசிநீம் அந்யக்ரஹ ப்ரவேசிநீம், த்யஜந்தி பார்யாம் தசபுத்ர மாதரம்" "தன்னிற் பொருடிருட றண்கணவ னேடெதிர்த்துப், பன்ன லிகழ்தல் பரகிருகந் - துன்ன, லசனமுன் னே யார்தலய லார்க்கநுகூ லத்தா - டசமகவீன் றுளேனுந் தள்" என்னும் அச்சுலோகம் அவ்வெண்பாக்களானும், குருலிங்க சங்கமம் பேணுமாற்றை "தானுறு முடன்மனந் தனமென் றுள்ளவை, யீனமில குருசிவ சரங்கட் கீந்துதான், யானென தென்குத லின்றி வைகுவோன், மேனிகழ் சிவமொடு வேற லானரோ" எனவும், "தலைமைசெய குருசிவ சரங்கட் காகவே, யுலையிடு மரிசியன் றேங்கன் மத்தெறி, யலையமு தாந்தமக் காக வாக்குறிற், கொலைசெயு நஞ்சினுங் கொடிய தாகுமால்" எனவும் வரும் பிரபுலிங்கலீலைச் செய்யுட்களானு மறிக. ஏனைத்தன் மம்போன் றுயர்வுடைத்தாதலை, "அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற், போஒய்ப் பெறுவ தெவன்" என்பதாதிய திருக்குறள்களா னறிக. வெண்நகம் வாச - வெண்மையாகிய கைலாயமலையின்கண்ணே வசிப்பவனே என்க.

௭௦. இக்செய்யுள் "மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம், யாவுள முன்னிற் பவை" என்னுந் திருக்குறட்கருத்துவைத்தோதப் பெற்றது பரம்பரையில் விதி உற்பநர்க்கும் - அடியேனுடைய சந்ததியில் ஊழ்வயத்தாற் பிறந்தவர்க்கும் என்க. பதிபொற்பு என்றதில், பதி வினைத்தொகை.

௭௧. ஏவாதே நின்றுணர் மக்கள் பூவாதே காய்க்கு மரம்போல்வ ரென்பதனை 'பூவாதே காய்க்கு மரமுமுள மக்களுளும், மேவேதே நின்

பாத்திய ராஞ்சுதர் கல்வி விநயசம் பத்தினரா
யாத்தம் விராய்லௌ கிககா ரியம்வகித் தாதரிக்கத்
தூத்தவத் திற்றமட நாட்கழி யாதவர் துய்ப்பர்கொலோ
மீத்திகழ் பேறு கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௭௨

அயலார்க் கெளிதின்முற் றுங்கா ரியங்கணின் னன்பர்கட்கு
முயலாத் திரிந்தும் முடிதற்கு நீட்டித்த மோனமற் றாழ்ச்
செயலா மெனினகைப் பார்பிறர் வல்லை செயிற்புகழுன்
வியலா ரருட்குக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௭௩

சத்துவ முன்முக் குணமதன் மிச்சிரந் தன்மமுதன்
முத்திறப் பால்செய முக்கிய மிற்றுறை மூழ்கினவ
ரெத்தை விடுவது மூன்று ளிகபர வேதுவென
வித்த மிடைத்து கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௭௪

---

றுணர்வார் தாமுளரே" எனவரும் ஔவைப்பிராட்டி திருவாக்கா னறிக. மூவாமுன் முதுமைப்பருவமடைதற்கு முன்னரே.

௭௨ பாத்தியர் - உரியவர். சுதர் - புத்திரர். விநயம் - அடக்கம். சம்பத்து - செல்வம். ஆத்தம் - அன்பு; ஆப்தம் என்னும் வடமொழி இவ்வாறாயிற்று.

௭௩. முயலா - முயன்று. மோனம் - பேசாமை. வல்லை - விரைவுப்பொருளைத் தருவதோரிடைச்சொல்; இதனைக் குணவடியாகப் பிறந்த முன்னிலைக்குறிப்பு வினையாலணையும் பெயராக்கி எல்லாம் வல்லவனாகிய நீ எனக் கோடலும் ஒரு தொனிப்பொருள். வியல் - விஸ்தாரம்.

௭௪ இதன்பொருள்:—சத்துவம் முன் முக்குணம் அதன் மிச்சிரம் தன்மம் முதல் முத்திறம் பால் செய்ய முக்கியம் - சத்துவம் இராசதம் தாமதம் ஆகிய மூன்று குணங்களும் அதன் கலப்புக்களும் அறம் பொருளின்பமென்னு மூன்றுவகைப் பகுதிகளையுஞ் செய்தற்கு இன்றியமையாதனவாம், மூன்றுள் இகபர ஏது என வித்தம் இடைத்து - மேற்கூறிய முப்பாற்பகுதியினுள்ளும் ஐகிகாமுஷ்மிக சாதகமென்னும்படி பொருளென்பது நடுவணதாய் விசேடிப்பநின்றது. இல் துறை மூழ்கினவர் விடுவது எத்தை - கிருக

இடம்பொரு ளேவலுள் ளொன்று குறையி னெடுத்ததொழி
றிடம்பட முற்றில வேட்டவை யன்பர் தெரிப்பவதற்
குடம்படு மீந்துளை முட்ட வவர்க்கொன் றுனக்குளநி
மிடம்பொறுக் காது கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௭௫

---

மார்க்கத்தில் அழுந்தினோர் விடற்பாலது இவற்றுள் எதனைஎன்ற வாறு. அவர்க்கு அனைத்துந் தழுவப்படுமென்பதாம்; விடாது தழுவப்படினும் அதனால் அகிதம் வாராதபடி காத்தி என்னும் பிரார்த்தனை குறிப்பெச்சமாய் நின்றது. உலகத்துப் பெரும்பாலும் ஒவ்வொரு தொழிலும் காலோஜிதம்பற்றி சதுவிதோபாயத்துள் ஒன்றுமுதலாக ஏற்பனவற்றை வேண்டப்பட்டு முற்றக்காண்டலானும், அவ்வுபாயத்துள் முன்னையது சத்துவத்தும் பின்னையது தாமதத்தும் இடையன இராசதத்துந் தோன்றுதலானும் மிச்சிரமும் முக்கியமாயிற்று. சாமம் - இன்சொற்கூறல்; பேதம் - பிரித்தல்; தானம் - கொடுத்தல்; தண்டம் - ஒறுத்தல்; முப்பாலினுள்ளும் பொருள், ஏனையவின்பவறமிரண்டையும் தருதலின் இகபரவேதுவாய் விசேடித்துநிற்றலை "ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு, ளேனை யிரண்டு மொருங்கு" என்னுந் திருக்குறளானும், "வடுவிலா வையத்து மன்னிய மூன்றி, னடுவண தெய்த விருதலையு மெய்தும், நடுவண தெய்தாதா னெய்து முலைப்பெய், தடுவது போலுந் துயர்" என்னும் நாலடியார்ச் செய்யுளானும், "முனிவரு மன்னரு முன்னுவ பொன்னான் முடியும்" என்னுந் திருக்கோவையார்ச் செய்யுளானும், "பொன்னி னாகும் பொருபடை யப்படை, தன்னி னாகுந் தரணி தரணியின், பின்ன ராகும் பெரும்பொரு ளப்பொரு, டுன்னுங் காலைத் துன்னாதன வில்லையே" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளானும், "பொருளாற் பெறுவ புகழ்ச்சியறம் புரைதீரின்பம்" என்னுந் திருவெற்றியூர்ப்புராணச் செய்யுளானுமறிக.

௭௫. அவை வேட்டு அன்பர் தெரிப்ப - அவைகளை விரும்பி நின்னடியவர் தெரிவித்துக்கொள்ள என்க. உடம்படு - உடன்பட்டு; செய்பு என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். முட்ட - முட்டுப்பாடடைய; இப்பொருட்பேற்றை "முட்டாத முச்சந்தி மூவா யிரவங்க்கு மூர்த்தியென்னப், பட்டானை" எனவரும் தேவாரத்தானறிக. அன்பர் வேட்டுத் தெரித்தவாறே எம்பெருமான் ஈந்தமையை "கோளிலி

நவநிதி சுற்ற மெனுமிரு சார்பினை நண்ணியுமென்
சிவவிநி யோகஞ் செயாரே லவர்புகழ்த் தேகமுறுர்
புவநியி னின்பொருட் டுய்த்தார் புகழோ புராணத்தினல்
விவரண மான கலங்காத கண்டவென் விண்ணப்பமே. எகூ

வலிந்தினி யாள்க வெவைக்கும் பழுது வராதபடி
கலந்த கருணைக் குபாயந் தெரியுங் கழறுவதெ
னலந்தவிர் வாழ்க்கை யழிவ ததிற்பட் டறுதினமு
மெலிந்திடு வேனைக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. எஎ

---

யெம்பெருமான் குண்டை யூர்ச்சில நெல்லுப் பெற்றே, னுளிலை யெம்பெருமா னவையட்டித் தரப்பணியே" எனத்திருவாய்மலர்ந்த ஆலால சுந்தராதி பக்தசரித்திரங்களானறிக

எகூ. நவநிதி - ஒன்பது குபேரசம்பத்து; அவை கச்சபநிதி, கற்பநிதி, சங்கநிதி, நந்தநிதி, நீலநிதி, பதுமநிதி மகாநிதி, மகாபதும நிதி, முகுந்தநிதி என்பனவாம். சுற்றம் - பந்து. புகழ்த்தேகம் - புகழுடம்பு. விவரணம் - விஸ்த்தாரம்.

எஎ. எவைக்கும் என்றது இங்கே உயிர்ச்சார்பு பொருட்சார்பு களை. அலம் – போதுமெனல்; அதாவது திருப்தி. வாழ்க்கை அழிவ தென்பதனை "வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்" எனவும் "தந்தையார் தாயா ருடன்பிறந்தார் தாரமார் புத்திரரார் தாந்தா மாரே, வந்தவா றெங்ஙனே போமா றேதோ மாயமா மிதற்கேதும் மகிழவேண்டாம்" எனவும் "தந்தையார் போயினுர் தாயரும் போயினுர் தாமும் போவார், கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார் பார்க்கின்றுர் கொண்டு போவா, ரெந்தநாள் வாழ்வதற் கேமனம் வைத்தியா லேழை நெஞ்சே" எனவும் வருவனவாதிய தேவாரங்களானும், "நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும், பெருமை யுடைத்திவ் வுலகு" என்னுந் திருக்குறளானும், "தொல்லைநம் பிறவியெண்ணிற் றெடுகடன் மணலுமாற்று,வெல்லைய வவற்று ளெல்லா மேதிலம் பிறந்து நீங்கிச், செல்லுபக் கதிகடம்முட் சேரலஞ் சேர்ந்து நின்ற, வில்லினு ளிரண்டு நாளைச் சுற்றமே யிரங்கல் வேண்டா" என்னும் சிந்தாமணிச்செய்யுளானும் அறிக.

உனைப்பற் றுபுதிரும் பாப்பெரு வாழ்வெற் கொருப்படுமே
லெனைப்பற் றியவிரு சார்புமுய் வெய்து மிதனைமல
முனைப்பற் றவர்சரி தத்துணர்ந் தேனது முற்றவெனை
வினைப்பற்று நீக்குங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௭௮

மோகனஞ் செய்பவன் மீட்பவன் கூட்டி முடிப்பவனீ
யாகலி னன்பர் விருப்பீ வதுநிற் கபாரமிலை
யீக விரத்தக் கவனெனக் கண்டுனை யேற்றனன்றெய்
வீக வரத கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௭௯

சித்தியும் புத்தியு மாமிரு தாயர்கள் செப்பிலரோ
வெத்திற நின்றனை யத்திற நிற்பவ ரேனுமிங்குப்
பித்தின ராயெம் மகார்க்கரு ளென்பர் பிதாவினர்பான்
மெய்த்தனை மார்கள் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௮0

---

௭௮ இருசார்பு - உயிர்ச்சார்பு பொருட்சார்புகள் மலமுனைப்பு அற்றவர் - ஆணவச்சேட்டையற்ற அன்பர்கள். சார்பும் உய்வெய்தினமையை "ஸ்ரீ அரதத்தாசாரிய சுவாமிகள் சரித்திர"த்தினும் இதர பக்தசரித்திரங்களினும் அறிக.

௭௯. மோகனம் - திரோபவம்; அஃதாவது பஞ்சகிர்த்தியத்துள் ஒன்றாகிய மறைத்தல். மீட்டல் - திரும்பவிநிவித்தலாகிய விளக்கம். கூட்டிமுடித்தல் - வினைப்பயன்களையறிந்து உயிர்கட்குச்சேர்த்து அதனை ஒழிவித்தல். அபாரம் - அசாத்தியம் இரத்தக்கவன் என உனை கண்டு ஏற்றனன் ஈக - நல்கூர்ந்தார் இரத்தற்கேற்புடையான் என்று உன்னை அறிந்து யாசித்தனன்; அதனால் அடியேன் வேண்டியவற்றை ஈந்தருளுக என்க. வாதன் - வரமருளத்தக்கோன்.

௮0 குணியாகிய சிவம் எத்திறம் நின்றதோ குணமாகிய சத்தியும் அத்திறம் நிற்கு மென்பதனை "எத்திற நின்றா னீச னத்திற மவளு நிற்பள்" எனவரும் சிவஞானசித்தித்திருவிருத்தத்தானும், ஆன்மாக்கள் சிவப்பேறடைவதற்குத் திருவருட்சத்தியே இன்றியமையாத்துணை என்பதனை "திசைநோக்கிப் பேழ்கணித்துச் சிவபெருமானேவெனினு, மிசையானு லென்றிறத்து மெனையுடையா ளுரையாடாள்" என்னுந் திருவிசைப்பாவானும் "மெய்யருளாந் - தாயுடன் சென்றுபின் றாதை

தனக்குவ மைவே றிலானடி சார்ந்தவர் தங்கட்கலான்
மனக்கவ லைமாற் றரிதென வள்ளுவர் வாய்மலர்ந்தா
ருனக்குவ மையிலை யுற்றேன் கவலொழித் தோம்புதியால்
வினைக்கழிந் தேனைக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே அக

பாழும் பவமகல் பேறுந் தெரிந்துன் பதமலரே
வீழும் பருவர் வெளிப்பட லௌகிக மேவினுமென்
வேழம் பொருந்துடற் காப்பின் மனமுறை வித்தையுய்க்கும்
வேழம்ப ரொப்பார் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. அஉ

---

யைக் கூடிப்பின் றாயைமறந் - தேயும தேநிட்டை யென்றா னெழிற் கச்சி யேகம்பனை" என்னும் பட்டினத்தடிகள் பாடலானும் அறிக. இங்கு - இவ்வுலகம். மெய்த்தனை மார்கள் மெய்யன்பையுடைய தாய் மார்கள். பித்து - மகவின் மயமாய் நிற்குமன்பானாயமயக்கம்; இதனை "பெற்ற மனம் பித்துப் பிள்ளை மனங் கல்லு" எனக்கூறப்படும் பழமொழியானறிக. தன்னை - தாய்; அது இங்கே தனை என இடைக் குறைந்தது; இதனை "அம்மை யன்னையா யவ்வை தம்மனை, தருமோ யீன்ற டன்னைதா யென்ப" என்னும் பிங்கலந்தைச் சூத்திரத்தானறிக. மெய்த்து அனைமார்கள் எனப்பிரித்து அதற்கேற்கப் பொருள்கொள்ளினும் அமையும்; இனி "புகழ்புரிந்தில்லிலோர்க்கு" என்புழிப்போலப் பெயரெச்சத்தீறு தொக்கதாகக்கொண்டு, மெய்த்த அனைமார்கள் எனப்பிரித்துப் பொருள்கோடலுமாம்.

அக. கவல் - கவலை அழிதல் - கலங்குதல். இச்செய்யுள் "தனக் குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால், மனக்கவலை மாற்ற லரிது" என்னுந் திருக்குறளையொட்டிக் கூறப்பெற்றது.

அஉ பாழ் - முப்பாழ்; அவைகளை "காரிய மேழ்கண் டறுமாயப் பாழ்விடக், காரணமேழ்கண் டறம்போதப் பாழ்விடக், காரிய காரண வாதனை கண்டறஞ், சீருப சாந்தமுப் பாழ்விடத் தீருமே" "மாயப் பாழ் சீவன் வியோமப்பாழ் மன்பரன், சேயமுப் பாழெனச் சிவ சத்தி யிற்சீவ, ஞேய வியாப்த மெனுமுப்பா ழாமந்தத், தூய சொரூ பத்திற் சொன்முடி வாமே" என்னும் திருமந்திரச்செய்யுட்களா னறிக. வேழம் - மூங்கில். வேழம்பர் - கழைக்கூத்தாடிகள். உடற் காப்பின்கண்ணே தம்மனத்தையும், கூத்தின்கண்ணே தமது வசனத் தையும் செலுத்துகின்ற கூத்தாடிகளைப்போல்வர் என்க.

சகத்திநுக் கேற்க நடிக்கா விடிலோ சகம்பழிக்கு
மகத்துறை வார்க்க தவசிய மாயிற் றதனொடுஞ்சிற்
சுகத்திநுக் கேதுவைச் சாதிக்க நேரந் துளியுமில்லை
மிகத்தவிக் கின்றேன் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௮௫

ஒன்றைவிட் டொன்றினைப் பற்றிப் பிடித்த லுயிர்க்குணமா
மென்ற சுருதி பிரவர்த்தி மார்க்கத் திசைந்ததுள்ளம்
பொன்ற தனைவிடி னன்றோ நிவர்த்தி புகுந்திடலாம்
வென்றி தருக கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௮௬

தலைப்பட் டனர்துறந் தார்மற்றை யார்சமு சாரமையல்
வலைப்பட் டனரெனும் வள்ளுவர் பாவென் மனத்தறிந்தென்
புலைப்பட்ட மூவே டணைகள் விழுங்கிப் புறத்துமிழா
விலைப்பட்ட னன்கா கலங்காத கண்டவென் விண்ணப்பமே ௮௭

---

௮௫. நடித்தல் - புறத்தே பிறரொப்ப நடத்தல். அகத்து உறைவார் - இல்லத்திருப்பவர். சிற்சுகம் - ஞாநமய பாகிய மோக்ஷசுகம். தவித்தல் - இளைத்தல்.

௮௬. ஒன்றைவிட்டொன்றினைப் பற்றிப்பிடித்தலை "உள்ளதே போதுநா னெனக்குளறியே யொன்றுவிட் டொன்றுபற்றி" எனவும் "பற்றுவெகு விதமாகி யொன்றைவிட் டொன்றனைப் பற்றியுழல் கிருமி போலப், பாழ்ஞ்சிந்தை பெற்றநான்" எனவும் வரும் தாயுமான சுவாமி பாடல்களானறிக. உள்ளம் - என்றது உயிரை; இதனை "மாயா தநுவிளக்கா மற்றுள்ளங் காணுதே - லாயாதா மொன்றை யதுவதுவாய்" எனவருஞ் சிவஞான போத வெண்பாவானறிக.

௮௭. புலைப்பட்ட - இழிந்த. மூவேடணை - ஏடணாத்திரயம்; அவை-தாரேடணை, புத்திரேடணை, அர்த்தேடணை என்பன; ஏடணை - ஆசை. இச்செய்யுள் "தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி, வலைப் பட்டார் மற்றை யவர்" என்னுந் திருக்குறட்கருத்து வைத்தோதப் பெற்றது.

மக்கண் மனையனை யப்பன் சகோதரர் மற்றுமுள்ள
வொக்கனட் டார்மற் றொருவ ரொருவரை யோம்புதற்குத்
தக்கவ ரல்லர்முக் காலத் தெவரையுந் தாங்கிநின்ற
மிக்க துணைநீ கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௮௬

ஆண்டிற் சிறியர் பெரிய ருரிய ரயலர்தின
மாண்டு வரல்கண் டிருந்து முலக மயலிலவா
மூண்டது மீட்க வடியே னசத்தனம் மோகமற
வேண்டுங் கருணை கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௮௭

பிறிதின் கிழமைப் பொருளே விடாதவிப் பேயனெவ்வா
றறிதந் திடுவ னுடற்றற் கிழமையை யந்நியமென்
றுறியுந் தயிரு மெனவுடற் கண்ணுயி ருற்றதினால்
வெறிதங் கிதழிக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௮௮

---

௮௬. ஒக்கல் - சுற்றத்தார். முக்காலம் - பூத பௌஷ்ய வர்த்தமானம் என்னுங் காலத்ரயம். தாங்குதல் - தளரவிடாது பாதுகாத்தல். இதனை "சடையவ னேதளர்ந் தேனெம் பிரானென்னைத் தாங்கிக்கொள்ளே" எனவருந் திருவாசகத்தானுணர்க.

௮௭. அவா - ஆசை. அம்மோகம் - அந்தமயக்கம். அசத்தன் - சத்தியற்றவன்.

௮௮. பிறிதின் கிழமைப்பொருளாவது - தன்னின்வேறாயது. தற்கிழமைப்பொருளாவது - தன்னோடொற்றுமையுடையது. இங்கே கூறிய உடற்றற்கிழமை, தற்கிழமைப்பொருளைந்தனுள் உறுப்புத்தற்கிழமையெனக் கொள்ளக்கிடக்கும்; இவ்விவரணத்தை "ஆற னொருமைக் கதுவு மாதுவும், பன்மைக் கவ்வு முருபாம் பண்புறப், பொன்றன் கூட்டம் பலவி னீட்டந், திரிபி னாக்க மாந்தற் கிழமையும், பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே" என்னும் நன்னூற் சூத்திரத்தானும் அதனுரையானும் அறிக. உடற்கண்ணுயிருற்றமையை, "ஊனாரு முடற்சுமையென் மீதேன் வைத்தா யுயிரெனவு மென்னையொன்று வுள்ளேன் வைத்தாய்" எனவரும் தாயுமானசுவாமி பாடலானறிக.

கீசக வுள்ள முனையினி மேவக் கிருபைசெய்தி
வாசனை யாகிய மாயா விருத்தி வாராதபடி
யோசனை யான்செயி னோவ வுரனிலிக் கொன்றுபத்தாய்
மீசர மான கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௮௯

ஊணையு மாண்பக னாணையும் வீண ருறவினையும்
வாணுத லாரையும் பேரையு மூரையும் வாழ்வையுமே
பேணி யொழித்தனன் கால மினிச்சிவப் பேறுபெற
வேணவா வற்றேன் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௯0

போக்கிய போக மிரண்டு வகைப்படும் பொய்மெய்யென
வேற்குந் தநுகர ணம்மிரண் டன்கண்ணு மென்னினுமொன்
றார்க்கும் வராதுன் னருடர வாஞ்சிப் பவர்க்குறுமெய்
வேட்கைய தீக கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௯௧

---

௮௯. கீசகம் - குரங்கு. வாசனை - பற்று. விருத்தி - தொழில். ஓவுதல் - நீங்குதல். மீசரம் - அதிகம். உள்ளம் குரங்கு போல்வதனை, "சதாமோகாடவ்யாஞ் சரதி யுவதீநாங் குசகிரௌ, நடத்தியாசா சாகாஸ்வடதி சடிதி ஸ்வைரமபிதஃ, கபாலிந் பிக்ஷோமே ஹிருதயகபி மத்தியந்த சபலம், த்ருடம் பக்த்யா பத்வா சிவபவ தீநங்குருவிபோ" என்னுஞ் சிவாநந்தலஹரிச் சுலோகத்தாலுணர்க.

௯0. மாண்பு அகல் நாண் - நன்மையினீங்கியமானம்; அஃதாவது அந்தணர், சான்றோர், அருந்தவத்தோர், தம்முன்னோர், தந்தை தாயென்றிவரை வணங்க இலச்சைகொண்டு வணங்காதிருத்தன் முதலியன. வீணர் - பயனற்றவர். வேணவா - பேராசை. பேறுதை துயரே கதியடைவரென்பதனை, "மண்ணினும் பொன்னினு மனைக்கு வாய்த்ததோர், பெண்ணினு மகவினும் பெரிய பேரினுந் துண்ணென விழைவினைத் துறந்த தூயரே, விண்ணினு மகிழ்வொடு மேவி வாழ்வரால்" என்னுஞ் சிவதருமோத்தரச் செய்யுளானறிக.

௯௧. போக்கியம் - அனுபவிக்கப்படும் பொருள். போகம் - அநுபவித்தல். இவைகள், பொய்ப்போக்கிய போகங்களெனவும், மெய்ப் போக்கிய போகங்களெனவும் இரண்டுவகைப்படும் என்க. தநு - சரீரம். கரணம் - மனம் முதலிய துணைக்கருவி. இத்தநுகரணங்கள் மேற்

அநித்த முணரும் பொழுதிக போகத் தபேட்சையில்லை
தனித்த பொழுதது வேமய மாகித் தளர்வனந்தோ
மனித்தப் பிறவி வருவ தரிது வழங்குனருண்
மினிற்றபுந் தேகங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௩௨

செருத்தலின் முட்டிகன் றுண்ணச் சுரவாத தேனுவுண்டோ
பொருத்த மிலியென் றெனையெள்ளல் வேறு புகலுமில்லை
திருத்த முறுத்துபு முன்பின் னருளிற் றிருவருட்கு
விருத்தமு மில்லை கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௩௩

பள்ளம் புகுபுனல் போற்கண் டளவினிற் பாவையர்பா
லுள்ளம் புகுகின்ற தீச்செய்கை காணி னுரனுடையா
ரெள்ளுவர் தாய்வயிற் சேய்குறை நாண்விட் டியம்பலொப்ப
விள்ளுத லுற்றேன் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௩௪

---

கூறிய பொய்ப்பகுதியும் மெய்ப்பகுதியுமாகிய இரண்டனிடத்தும் துய்ப்போனுய்க்குமாயின் அவற்றைக் கொண்டியையுந் தன்மையை யுடையனவாமென்றாலும் ஒன்றுமட்டும் யாவர்க்கும் எளிதின்வரமாட்டாது; விரும்புவார்க்கு உன் றிருவருள் கூட்டவரும்; அதுயாதெனில் மெய்ப்போக்கிய போகம்; அதனைத்தாக்கடவாய் என்க. வாஞ்சித்தல் - விருப்பங்கோடல்.

௩௨. அநித்தம் உணரும்பொழுது - அநித்தியத்தை யுணருஞ்சமயம். தனித்தபொழுது - அவ்வுணர்ச்சியை விட்டொழிந்த சமயம். அபேட்சை - ஆசை. மினிற்றபும் - மின்னலைப்போல விரைவிற்கெடும் என்க.

௩௩. செருத்தல் - பசுவின்மடி தேனு - பசு. முன் திருத்தம் உறுத்துபு - முன்பு திருத்தஞ்செய்து. விருத்தம் - ஒவ்வாமை

௩௪. உரனுடையார் - அவர்பாற்புகாத மனவலியுடையாரென்க; உரம் - வலி; அது உரனெனப் போலியாயிற்று. தாய்வயின் சேய் நாண்விட்டுக் குறையியம்பல் ஒப்ப விள்ளுதலுற்றேன் - உடற்கன்னியாய மாதாவினிடத்துப் புதல்வர் வெட்கப்படாமற் றங்குறைகளைச் சொல்லுதல்போல உயிர்க்கன்னியாய தேவரீரிடத்திற்றெரிவித்துக்கொண்டேன் என்க. பாவையரைப் பார்த்தமாத்திரத்திலே உள்ளம்

விளங்க வறிவித் திலேயுள் ளிருந்துமெய் மித்தையைநான்
களங்க மிலாமதி போலு முகத்தியர் காதலிற்பட்
டுளங்களித் துப்பின் னுறுவது மோரா தொருத்தலுண்ட
விளங்கனி யொத்தேன் கலங்காதகண்டவென்விண்ணப்பமே. ௬௫

மாழைமைப் பாவிய கண்ணியர் வன்மத் திடவுடைந்து
தாழிமைப் பாவு தயிரிற் றளர்ந்தமை சாற்றுவரேல்
வாழி மணிவா சகரதைத் தாண்டும் வகையெவர்க்காம்
வேழ முகத்துக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௬௬

ஆடை யணிதொடை குங்குமஞ் சாந்த மரிசனங்கண்
சாடை மொழியுருச் சாயை மயறாத் தையலராம்
பீடை படிநெஞ்சழி காறுஞ் செலாது பிறவிலுளம்
வேடை கணைதீ கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௬௭

---

புகுதலே "விஸ்வாமித்ர பராசர ப்ரபிருதயோ வாதாம்பு பர்ணசநா: தேபீ ஸ்த்ரீமுக பங்கஜம் சுலலிதம் த்ருஷ்டுவைவ மோஹங்கதா: சால் யந்நம் சக்ருதம் பயோததியுதம் யேபுஞ்சதே மாநவா: தேஷா மிந்த்ரிய நிக்ரஹோ யதிபவேத் விந்த்ய:ப்லவேதாம்புதௌ" என்னும் பர்த்ரகிரி சுலோகத்தானறிக.

௬௫. மித்தை - பொய் மதிபோலும் முகத்தியர் - பெண்கள். ஒருத்தல் வேழத்தின் பரியாயநாமம்; வேழமென்பது விளாங்கனிக்கு வருவதோர் நோய்.

௬௬. இச்செய்யுளில் மாழைமை என்பதுமுதல் தளர்ந்தென்பது வரையும் திருவாசகம்.

௬௭. அரிசனம் - மஞ்சள். கண்சாடை - கண்சமிக்ஞை. பீடை தோஷம். ஒழிகாறும் உள்ளம் பிறவிற்செல்லாது - தீரும்வரையினும் மனமானது இதரவிடயங்களிற் பிரவர்த்திக்கமாட்டாது. வேள் தை கணை தீ - மன்மதனுடைய பாய்கின்ற அம்புகள் (பூவெனக் கூறப்படினுஞ் சுடுஞ்செய்கையால்) நெருப்பேயாம் என்க. இனி வேடைகள் தை தீ எனப்பிரித்து காமநோய்களை தைத்துவிடு தீத்துவிடு என்னினும் அமையும்; இப்பொருள்கோட்கு தை தீ இரண்டும் ஏவல்வினை முற்று.

ஐம்புலன் சேர நுகர்சுக மொண்டொடி யார்கணுள
தின்பஞ் சிறிய தெனினு மதிற்பெரி தெட்டினன்றோ
நன்பஞ் சககஞ் சுகவுயிர் மேற்சொன் னதைக்கைவிடும்
வெம்பஞ் சதீத கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௯௮

உலகா டவிக்கு ளெனைப்புல வேட ரொறுப்பவுனைப்
பலகா லழைத்தனன் தாங்காது பக்குவம் பார்த்திருந்தா
லிலகா வணைத்தி யிறுதி வரிற்பழி யார்கண்ணதோ
விலகா தவனீ கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௯௯

தாயே பிதாவே தமரே குருவே சகலமுநீ
நாயேன் பிறவி களிற்செய் யிழிதொழி லுடியெனை
வாயேன் பெருமித மேனுனக் கென்று வரைந்துவிட்டால்
வீயே னிருந்தென் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௦௦

முக்க ரணங்க ளொருங்கு நிலைகெட மொய்த்தபிணி
துக்க ரணங்கொண் டலைதன் முறையோ சுகாநுபவ
மொக்கநின் பால்வா வென்றுசெய் வாயுனக் கோலமிட்டேன்
மிக்கவர் போற்றுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௦௧

---

௯௮. ஐம்புலனும் ஒருசேர அநுபவிக்குஞ் சுகம் பெண்பாலா ரிடத்தே உண்டென்பதனை "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு, மொண்டொடி கண்ணே யுள" என்னுந் திருக்குறளானறிக பஞ்சக கஞ்சுகம் - உயிர்பற்றிநின்ற ஐங்கோசம்; அவை அந்நமயம், பிராணமயம், மநோமயம், விஞ்ஞானமயம், ஆநந்தமயம் என்பனவாம். வெம்பு அஞ்சு அதீத - கொடிய பஞ்சபாணவத்தைகளையுங் கடந்தவனே என்க; அஞ்சு - இருமடியாகுபெயர்.

௯௯. அடவி - காடு. இலகா - (அகத்தும் புறத்தும்) விளங்கி யென்க. இலகுதல் - விளங்குதல். செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். விலகாதவன் - பிரியாதுயிரோடுடனாய் நிற்பவன் என்க.

௧௦௦. முதலடியில் ஏகாரம் நான்கும் எண்ணின்கண் வந்தன. வரைதல் - நீக்கல்.

௧௦௧. முக்கரணம் - மனவாக்குக்காயங்கள். சுகாநுபவம் ஒக்க நின்பால்வா - சுகாநுபவத்தோடுங் கூடவே உன்னிடத்து மேற்கூறிய

கதிக்குட் புகவெற் கொருவழி காட்டுதி காதலன்பர்
திதிக்குந் திருவருட் பாக்க டிளைத்த செவிகொடுத்தென்
றுதிக்கு மிரங்கித் துதிக்கைச் சுமுகச் சுடர்விளக்கே
விதிக்கும் விதியே கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

சரியை முதலிய நான்கனு ளொன்றிற் சரிப்பதற்கு
முரியது நோய்க்கழு வாய்விரும் பாத வுடலதிலே
யரியு னெனவெனை யேசிற் றுலக மருளறையின்
விரியு மறிவை கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧0௩

மூர்த்தி தரிசனந் தீர்த்த முழுகுதன் முன்னுதல
யாத்திரை சில மொழுக்க நியதி யிவைவழுவக்
காத்திர நோயிற் கவலை யிருந்து கலங்கினன்யான்
வேர்த்துளம் விம்மிக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

கரணங்கள் வந்து பொருந்துப்படிக்கு என்க. ஒக்க என்பது கூட என்னும் உடனிகழ்ச்சிப்பொருளைத் தருவதோரிடைச் சொல்.

௧0௨. திதிக்கும் என்னும் வினையடியாகப்பிறந்த பெயரெச்சம் இங்கே எதுகை நோக்கி இடைக்குறைந்து திதிக்குமென நின்றது. திருவருட்பாக்கள் பன்னிரு திருமுறைகளாக வகுக்கப்பட்டவை. விதிக்கும் விதியே - பிரமாவிற்கும் அவனைப்படைத்தற்குரிய பிரமாவே என்க. விதிக்கும் விதியாதலை, "முழுவதும், படைப்போற் படைக்கும் பழையோன்" என்னுந் திருவாசகத்தானறிக. இனி ஊழிற்கும் அதனை மாற்றவுங் கூட்டவும் வல்லதாய ஓர்சூக்கும ஊழ்போன்றவனே என்பதும் ஒரு பொருள்; ஊழை மாற்றவும் வல்லானென்பதனை "ஊழ்வினையை மாற்றி யுலவாத பேரின்ப வாழ்வுதருஞ் செய்ய மலர்முகம்" என்னுங் கந்தர்கலிவெண்பாவானறிக.

௧0௩. சரியை முதலிய நான்காவன: சரியை கிரியை யோகம் ஞானம். கழுவாய் - தீர்க்கு முபாயம்; பிராயச்சித்தம் என்பதும் அது. ஏசிற்று, அருள், விரியும், அறிவை எனவந்த நான்கும் முற்றுச்சொற்கள்.

௧0௪. மூர்த்திதரிசனம், தீர்த்தஸ்நானம், ஸ்தலயாத்திரை மூன்றும் யாவர்க்கும் முக்கிய மென்பதை "மூர்த்தி தலந் தீர்த்த முறை

கொடேனொரு காசிரப் பார்க்குப் பலருணக் கூவல்குளங்
தொடேனுயர் தீர்த்தந் துளைந்தில னீத்தவர் துய்க்கவன்ன
மிடேனெனி னும்முனை யெய்தினன் காவென் றிரங்கியருள்
விடேன்விடே னுன்னைக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧0௫

பட்டினி யுற்றில னுற்றவர்க் கூறு பலபுரிந்தேன்
குட்டண மிட்டிலன் கோயில் புகுந்துனைக் கும்பிட்டில
னெட்டொ டிரண்டறி யாவிந்த வேழைக் கிலை துணைகை
விட்டனை யாயிற் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧0௬

வரதம் புரிந்தருள் சாந்த வடிவொடு வந்தென்முன்னீ
பரதந் திரனு னுளத்தொ டுருத்துற் பலமுடையேன்
சரத மொழுக்கஞ் சரியை கிரியை தவலங்கந
விரதம் புரியக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧0௭

---

யாற் றொடங்கினர்க்கோர், வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே'' என்னும் தாயுமானசுவாமி பாடலானறிக.

௧0௫. கூவல் - கிணறு. தொடுதல் - தோண்டுதல். துளைதல் - முழுகுதல். அருள் - ஏவன்முற்று.

௧0௬. குட்டணம் - குட்டிக்கொள்ளுதல்.

௧0௭. வரதம் - அநுக்ரகம். சாந்தவடிவு - அமைதியான கோலம்; இவ்வடிவு, உபாசகர் தம்மநோபீஷ்டங்களை விண்ணப்பித் தடைவதற் கேதுவாய் அவர்க் கச்சத்தை விளைக்காதசாந்த முடைமையால் அவரெல்லாம் வேண்டப்படுவ திதுவே என்பதனை ''எண்மையேற் கினிச் சாந்தவுருவினையாய்க் காட்சிதர லென்றுள் கேட்ட, வுண்மைநாயகன் மகிழ்ந்த வுளத்தோடுஞ் சாந்தவுரு வுடைய னானான்'' எனவரும் விநாயகபுராணச் செய்யுளானறிக. பரதந்திரன் - சுதந்திரஹீனன். உளத்தொடு உரு துற்பலம் உடையேன் - மனத்தோடுங்கூடச் சரீரத்தின் கண்ணும் பலஹீனத்தையுடையேன். சரதம் - அடியேன்கூறுவது உண்மை என்க. தவ லங்கநவிரதம் - தவம்புரிதலையும் உபவாசமிருத்தலையும் ஒருங்குதழுவிய விரதாநுஷ்டானம். லங்கநம் - உபவாசம்; இது வடமொழி. விரதம்புரியத்துற்பலமுடையேன் எனக் கூட்டுக.

சகாதவத் திற்கி தெனக்காய சித்தியைச் சார்ந்துடலிற்
புகாதிட ராகநன் றூற்றினர் பூருவ புண்ணியர்க
டகாதது செய்தேற் கதுநன் னெறியிற் சரிப்பதற்கு
விகாதம தாய்த்துக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. க0அ

இருள்வெளி யென்னு மிரண்டிற்கு மோரிட மென்னநின்பே
ரருடரு மின்பத் தழுத்தென்று வேண்டின ளௌவையுன்னைத்
தெருளத் திதிக்கு மதனை யெனக்குத் திரோபவமால்
வெருளத் தருதி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. க0௯

பொய்வைத்த வாசக னுயே னெனினும் பொறுத்துநின்பா
லௌவைப் பிராட்டி யகவலில் வேண்டிய வாறனைத்துங்
கைவரத் தந்தெனை யாணின் கருணைக் கடற்கிதுவே
மெய்வைத்த சீர்த்தி கலங்காத கண்டவென் விண்ணப்பமே கக0

---

க0அ. சகா - துணை. இடர் உடலிற்புகாதாக எனக்கூட்டுக. நன்று - உயிர்க்கு உறுதிபயக்கும் நன்மைகள். தகாதது - ஒவ்வாத காரியம். விகாதம் - தடை. அது பகுதிப்பொருள் விகுதி. ஆய்த்து - ஆயது; இதனை "நரரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே" என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானறிக.

க0௯. வெளி - ஒளி. தெருள் - அறிவு. தித்தித்தல் - இனித்தல்; அது திதித்தலென இடைக்குறைந்துநின்றது. திரோபவம் மால் வெருள - மறைக்கின்ற மாயாமயக்க மஞ்சும்படி என்க. ஔவைப் பிராட்டியார் வேண்டினமையை அவர் திருவாய்மலர்ந்த "சீதக்களப' என்னும் விநாயகரகவலில், "இருள்வெளி யிரண்டிற் கோரிட மென்ன, வருடரு மாநந்தத் தழுத்தி" எனவருமாற்றானறிக. கொற்றவன்குடி உமாபதி சிவாசாரிய சுவாமிகள் கொடிக்கவியில் "ஒளிக்கு மிருளுக்கு மொன்றே யிடமொன்று மேலிடினொன் றொளிக்கு மெனினு மிருளட ராது" எனத்திருவாய்மலர்ந்ததூஉம் இங்கே சிந்திக்கற்பாலது.

கக0. அகவல் - "சீதக்களப" என்னு முதற்குறிப்பையுடைய அகவற்பா.

கங்கை குவலயஞ் சூழ்ந்த கடல்கா விரிகுமரி
யெங்கு முழுகினு மீச னெனுதவர்க் கில்லையென
நங்குரு நாவர சோதிற் றெவைக்கு நடுவுளெநீ
வெண்கதிர் சூடி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௧௧

ஆசார மேவிக் கலப்பை யியன்ற வளவமைத்துன்
பூசா கிரியைப் புகிலறி யாதெனைப் புந்திபுறத்
தாசா விகாரத் தலைந்த தகைக்கொண் டருகமென
வீசாய் கருணை கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௧௨

உச்சநிட் காமியங் காமியந் தாழ்வென் றுரைத்தனநா
விச்சை யெழாது துறவிக்கில் லார்க்குளில் லாரரியர்
நச்சிச் செயினுமொன் றன்னடிப் பூசை நயந்தவரை
மெச்சிற் றுலகங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௧௩

---

௧௧௧. கங்கை, காவிரி, கந்யாகுமரி இம்மூன்றும் முறையே நான்மறை பயிலு நாட்டின்கண், வடதிசை மத்தி தென்றிசைகளில் உள்ள பிரபல நதிகள். குவலயம் சூழ்ந்தகடல் - பூமியை வளைந்த சமுத்திரம். நாவரசு - திருநாவுக்கரசு சுவாமிகள். மேற்கூறிய தீர்த்த ஸ்நானமும் ஈசுரத்தியான முள்ளார்க்கே பயன்றருமென அவர்கள் திருவாய்மலர்ந்த தேவாரம் "கங்கை யாடிலென் காவிரி யாடிலென், கொங்கு தண்குும ரித்துறை யாடிலெ, ளெங்கு மாகட லோதநீ ராடிலெ, னெங்கு மீசனெ னுதவர்க் கில்லையே" என்பதாம். நடுவுளான் - அந்தர்வாசி. வெண்கதிர் - சந்திரன்.

௧௧௨. கலப்பை உபகரணம்; இங்கே பூஜாதிரவியங்கள். இயன்ற வளவு என்பதனை ஆசாரம் கலப்பை இரண்டினும் ஒட்டுக. விகாரம் - வேறுபாடு. வீசுதல் - கொடுத்தல்.

௧௧௩. உச்சம் - உயர்வு. நிட்காமியம் - ஒன்றை விரும்பாமற் செய்வது. காமியம் - விரும்பிச்செய்வது. இல்லார் என்னும் இரண்டுண் முன்னையது இல்லறத்தார் என்பதையும் பின்னையது மேற்கூறிய இச்சையில்லாதவர் என்பதையும் குறித்துநின்றது. ஒன்று நச்சிச் செயினும் - ஒருபொருளை விரும்பிச்செய்தபோதினும் என்க. மெச்சுதல் - புகழ்தல்.

வைகறை யேர்ந்துடல் வாக்கு மனஞ்சுசி வாய்ந்தணிந்து
பொய்கை குடைந்தலர் கொய்து புறமகம் பூசித்திடே
னுய்கையெவ் வாறுசொல் லந்தகன் வாதை யொழிந்துயிர்தான்
மெய்கழல் போது கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ககச

வணங்கிடச் சென்னியு வாழ்த்திட நாவு மனமுன்னவு
மிணங்கிட நின்னன்பர் கூட்டமும் வைத்தனை யிஃதறியா
தணங்குசெய் யைம்புல வேடரொ டுற்றிங் கலைந்தனன்யான்
விணங்கிளர் சீர்த்திக்கலங்காத கண்டவென்விண்ணப்பமே.ககரு

எல்லா வினைக்கு மினிது சுழுனை யிரவிகலை
நல்லா தரவு தியாக சமாதி நடாத்தவென்று
வல்லா ருரைத்தன ரன்னவை யோங்க மனஞ்செய்தியால்
வில்லாரு மேனிக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ககசு

ஒட்டு பிராண வளியைக் கபாலத்தி னுள்ளுறுத்தி
மட்டற வோடு மனத்தை நிறுத்த வகையறியேன்
சிட்டரொ டென்னையுஞ் சேர்ப்பித் தியோகத் திறனருள்வாய்
விட்டுணு போற்றுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

ககச. வைகறை - சூரியோதயத்துக்கு முன்னைந்து நாழிகையள வுள்ள காலம். ஏர்தல் - எழுதல். சுசி - சுத்தம். கழல்போது - நீங்குங் காலம்; கழல் - வினைத்தொகை.

ககரு. அணங்கு - வருத்தம். விண்ணம் என்பதில் அம் சாரியை.

ககசு. இனிது என்று உரைத்தனர் எனக்கூட்டுக. சுழுனை - நடுநாடி. சுழுமுனை சுழுனை என்றாயது. இரவிகலை - சூரியகலை. வில் - பிரகாசம்.

ககஎ. ஒட்டு பிராணவளி - மனத்தொடு நட்புற்ற பிராணவாயு. ஒட்டுதல் - நட்புறுதல்; இதனை "நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே, யொட்டாரை யொட்டிக் கொளல்" என்னுந் திருக்குறளா னறிக. மனமும் பிராணவாயுவும் நட்புற்றமையை "ஆயின் மிக்கோ ரரிய செயலெலா, நேய மிக்க மனத்தை நிறுத்தல்காண், வாயு நிற்க மனமு முடனிற்கும், தோய நிற்குறி னிற்குந் தூரும்புமே" எனவரும்

கலையொழுங் காக நடக்கிற் கரணங் கலங்கலின்றி
நிலைபெறு மொன்றே நினையடை கின்றநன் னீர்மையுமாந்
தலைவ நினைத்தவிர்த் தில்லை யதுசெயுஞ் சார்பெனக்கு
மிலைமதி வேணிக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௧௮

தேக வலியரு ளின்றி யமையாத சித்தசுத்தி
யூகம் பொறைமெய் பிறமே னிராசை யுபகரணம்
யோகிற் கவையொடு யோகமுந் தந்தாள்வை யோகருணை
மேக மனையை கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௧௯

தியேய பதிநீ தியாதா பசுவெனச் செப்புமறை
தியானஞ் செயமுக் கியமாங் கருவி திடவுடல்காண்
டயாநிதி நீயது தந்தடி யேற்கென் சரீரமுறும்
வியாதி யொழித்தி கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

பிரபுலிங்கலீலைச் செய்யுளானும், "எந்நாளு முடலிலே யுயிரா முனைப் போ லிருக்கவிலை யோமன மெனு மியானுமென் னட்பாம் பிராணனும்" எனவரும் தாயுமானசுவாமிபாடலானும் அறிக. பிராணவாயுவைக் கபாலத்தேற்றலினல் வருஞ்சுகத்தை "உருத்தரித்த நாடி தன்னி லோடு கின்ற வாயுவைக், கருத்தி னாலி ருத்தி யேக பால மேற்ற வல்லிரேல், விருத்தர் கள்ளும் பால ராவர் மேனி யுஞ்சி வந்திடும், அருட் டரித்த நாத னாணை யம்மை யானை யுண்மையே" என்னுஞ் சிவவாக்கியர் பாடலானறிக.

௧௧௮. கலை - இடைகலை பிங்கலை சுழுமுனை என்னும் நாடிகள். கரணம் - அகக்கரணங்களும் புறக்கரணங்களும் என்க.

௧௧௯. இன்றியமையாமை ஆகிய சிறப்பு, சித்தசுத்திக்குரியது. ஊகம் - அறிவு. பிறமேல் நிராசை - யோகொழிந்த பிறவற்றினுண்டாய வெறுப்பு; எனவே யோகில் விருப்பு என்க. உபகரணம் - துணைக் காரணம். அவை என்றது மேற்கூறிய தேகவலியாதி உபகரணங்களை.

௧௨௦. தியேயன் - தியானிக்கப்படுவோன். தியாதா - தியானிப்பவன், சிவனொருவனே தியானிக்கப்படுவோனெனவும், ஸ்ரீமந் நாரா

நன்மை சுவேச்சை பரேச்சை நிரிச்சையி னண்ணிடுமேற்
றொன்மைச் சுகிர்தத் தொடர்பெனி னும்மது துய்த்திடுங்கா
லுண்மெய்க் கருணை யுதவிய தென்பர்க ளுத்தமர்கள்
வெண்மைக் கலைய கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கஉக

செயித்தைம் பொறியைச் சிறிதேனு முன்னைத் தியானித்தபோ
துயிர்த்துணை யாமதை யோங்க வருளுதி யுன்னையுளத்
தயர்த்தயற் போக்கிய போதிற் களவிலை யவ்வளவும்
வியர்த்தம தாகுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.கஉஉ

---

யனன் முதலிய அனைவரும் தியானிப்பவரெனவும் வேதம் கூறு மாற்றை "சிவ யோகோ த்யேயச் சிவங்கரஸ் ஸர்வமந்நியத் பரித்யச்ய" என்னும் அதர்வசிகா வாக்கியத்தானும், "நாராயண பரோத்யாதா" என்னும் தைத்திரீயமஹோபநிஷத்து வாக்கியத்தானு மறிக.

கஉக. நன்மை - உயிர் உவந்தடையத்தக்க நலம்; அவை இம்மை இன்பமும், மறுமைபயப்பதாய அறமும், இருமைபயப்பதாய பொருளும் என மூன்றுவகைப்படும். சுவேச்சை தானிச்சித்தல். பரேச்சை- பிறரிச்சித்தல். நிரிச்சை - இச்சியாதிருத்தல். இம்மூன்றுவழியானும் மேற்கூறிய நன்மை ஒருவற்குவாக்கூடும்; அவ்வழிகளால் வருவதும், தொன்மைச் சுகிர்தத்தொடர்பு எனினும், பூர்வபுண்ணியத் தொடர்ச்சியே என்றாலும், அது துய்த்திடுங்கால், அதையனுபவிக்குங்காலத்து, உத்தமர்கள் உன் மெய்க்கருணை யுதவியதென்பர்களென முடிக்க. கலை- இளஞ்சந்திரன்; வஸ்திரம் எனினுமாம்.

கஉஉ. தியானித்தபோது உயிர்த்துணை ஆம் - தியானித்தகாலம் உயிர்க்குத் துணையாகும். அயர்த்து அயல் போக்கியபோது - மறந்து புறம்போக்கியகாலம். வியர்த்தம் - வீண். நினையாதகாலமெல்லாம் வீண் என்பதனை "வாழ்த்த வாயு நினைக்கமடநெஞ்சுந், தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச், சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே, வீழ்த்த வாவினை யேனெடுங் காலமே" என்னுந் தேவாரத்தானறிக.

நால்வகைத் தோற்றத் தெழுபிறப் புள்ளு நரசநனஞ்
சால வுயர்ந்தது சைவ சமயந் தனிற்புகுந்து
பாலிய காலத் துனது திருவடிப் பத்திபண்ணன்
மேலிஃ தரிது கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௨௩

மதுசூ தனன்முதற் றேவர்க் கரியை மறைக்கரியை
யிதுசூழ்ச் சிகடந் திலங்கு நினக்கியல் பேனுமன்ப
ரதுசூ தனுக்கு மகத்தி லமர்தி யநவரதம்
விதுசூ ரியக்கட் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௨௪

ஏழொன் பதின்மர் முனோர்தீ விரதர மென்னுமன்புட்
டாழும் பரிசினர் சோதிப் பினுமவர் சாதித்தனர்
நீளன் பிலேனதற் காற்றகி லேனுள னின்பதத்தில்
வீழும் பரிசைக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௨௫

---

௧௨௩ - நால்வகைத்தோற்றமாவன:— அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என்பனவாம். எழுவகைப்பிறப்பாவன:—தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பனவாம். நரசநனம் - மனிதப்பிறப்பு.

௧௨௪- மதுசூதனன் - விட்டுணுமூர்த்தி. சூழ்ச்சி - தந்திரம். சூழ்ச்சி கடந்திலங்குதலை, "இத்தந்திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க் கத்தந்திரத்தி னவ்வயி னொளித்தும்" எனவருந் திருவாசகத்தானறிக. அது - ஆறும்வேற்றுமையுருபு. சூது அனுக்கும் அகத்தில் - வஞ்சனையையொழித்த மனத்தின்கண்ணே என்க; அனுக்கல் - கெடுத்தல். அநவரதம் - எப்பொழுதும். விதுசூரியன்கண் - சந்திரசூரியர்களாகிய நேத்திரத்தையுடையவென்க.

௧௨௫. ஏழொன்பதின்பர்முனோர் - அறுபத்துமூன்றுநாயன்மார் முதலியோர். தீவிரதரஅன்பு-நாலாஞ்சத்திநிபாதத்திற்குரிய மேலான அன்பு. தாழ்தல் - முழுகுதல். அதற்கு - அச்சோதனைக்கு என்க. வீழ்தல் - விரும்புதல்; நமஸ்கரித்தலெனினுமாம். வீழும்பரிசை உளன் எனக் கூட்டுக.

யாசகஞ் செய்தனன் வேண்டினர் வேண்டுவ தீவையெனப்
பேசின நூல்கொண் டடியவர் போற்பெரும் பேற்றையவ
ராசர ணையில னன்பவ ரிற்பதி னாறிலொன்றும்
வீசமு மில்லேன் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௨௬

முடிவதெய் யேன்பின் றிடபத்தி யென்கின்ற முக்கியமா
மடிவனு வில்லையந் தோநீ விரைந்தெனை யாள்வதற்குக்
கடிவதெந் நாடத் துவபந்த மூலாந்த காரமது
விடிவதெந் நாள்சொல் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

ஊன விழிக்குத் திரிசய மாகா யுனையுளையென்
றான சுருதியி னுத்தியிற் றேற லரிததனின்
ஞான விழிகொண் டநுபவத் தோர்வது நண்ணரிதா
மேனல மீதி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௨௮

பாலப் பருவ முதல கிரமப் படிவளர்ந்துந்
தூலத் தினுக்குயிர்க் கோமெய் யுணர்வெட் டுணையுமிலை
மாலைத் தொலைத்தெனக் குண்மை யறிவை வழங்குதியால்
வேலற்கு மூத்த கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௨௯

---

௧௨௬. அவர் ஆசரணை - அவ்வடியவர்களுடைய அநுஷ்டானம். வேண்டினர் வேண்டுவதீவை என நூல்கூறுமாற்றை "வேண்டுவார் வேண்டுவதே யீவான் கண்டாய்" எனவரும் தேவாரத்தானறிக.

௧௨௭. பின் முடிவது எய்யேன் - எதிர்காலத்தின் முடியப் போகின்றதிதுவென அறியேன் என்க; "எய்யா மையே யறியா மையே" என்றார் தொல்காப்பியனாரும். கடிவது - நீக்குவது. மூலாந்த காரம் - அநாதியாய ஆணவவிருள்.

௧௨௮. ஊனவிழி - முகக்கண். திரிசயம் - காணப்படுதல்; இது வடமொழி. ஞானவிழி - அகக்கண்.

௧௨௯. பாலப்பருவம் முதலாயின - சைசவம், யவ்வனம், கௌமாரம், வார்த்திகம் என்பனவாம். தூலம் - தூலவுடம்பு. மெய்யுணர்வு - சத்தையறியுமறிவு. மால் - மயக்கம்.

அகத்துக்க ணானுனைப் பார்த்து நிரதிச யாநந்தமே
மகத்துக்கண் மேவினர் யான்பெறச் செய்திலன் மாதவமுன்
முகத்துக்க ணானுனைப் பார்த்துரு காவிந்த மூடற்கருண்
மிகுத்துக்க ணீதி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கரு௦

[இதுமுதல் ஒன்பது செய்யுள்-ஏகான்மவாதமதக்
கொள்கையின் ஒவ்வாமை.]

அநாதி யடிமை யடியே மலமறுத் தாள்பவனீ
யெனுதவர் தேறவுந் தேவக் குழாத்தினு மில்லையுனை
விநாவுயர் நாயக னென்றுய்த் துணரவும் வேதமுன்பேர்
விநாயக னென்னுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கருக

வத்துவொன் றேசத் தவத்தையிற் சீவேச் வரசெகத்தாம்
மித்தையிம் மூன்றும் பரமார்த்தத் தென்பர் மிகவிழிபே
வத்துக் கவத்தை சொலல்கா ரணமென் வரவவத்தை
வித்தை விளக்கு கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கருஉ

---

கரு௦. அகத்துக்கண் - உட்கண். நிரதிசயாநந்தம் - தனக்குமேல் அதிசயப்படக் கூடியதாக வேறொன்றில்லாததாய ஆநந்தம். மகத்துக்கள் - பெரியோர்கள். முகத்துக்கண் - புறக்கண். நான்காமடியில் - உக்கண் என்பதை அந்தஞானக்கண் என்க; உகரம் - சுட்டு.

கருக. எனுதவர் - ஏகான்மவாதிகள். உனைவிநா - உன்னைத்தவிர. விநாயகன் என்பதற்கு - தனக்குமேலொரு தலைவனின்றித் தானே யாவர்க்குந் தலைவனாய் நிற்கும் விசேஷமுடையான் என்பதுபொருள்; இப்பொருளை "விக்கின முழுது நீக்கி வேண்டிய வரங்க ணல்கி, மக்கள்விண் ணவர்கள் யாரும் வழிபடு தெய்வ மாகி, யெக்கட வுளர்க்கு முன்னர்ப் பூசனை யேற்பா னாகி, மிக்கவ ரின்மை தோன்ற விநாயக ரெனும்பேர் தாங்கி" என்னும் விநாயகபுராணச் செய்யுளானுணர்க.

கருஉ. இதன்பொருள்:—வத்து ஒன்றே சத்து - பிரமப்பொருள் ஒன்றுமே நித்தியமாம், அவத்தையில் சீவேச்வர செகத்தாம் - (அது) அவத்தையினாலே சீவன் ஈச்சுரன் உலகமாயிற்று, பரமார்த்தத்து இம்மூன்றும் மித்தை - விவகாரமொழிந்தவிடத்து இச்சீவேச்வர

ஒருபொன் பலபணி யாமா றுலகுயி ரீசனென்றும்
பிரமமென் பார்பணி கம்மிய ரின்றிப் பிறந்திடுமோ
வறிவுயர் வத்துல காயதென் பொன்னிரும் பாவதுண்டோ
மிருதவர் கோள்போங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

செகத்துக்கண் மூன்றும் பொய்யாம், என்பர் - என்று ஏகான்மவாதிகள் கூறுவர், வத்துக்கு அவத்தை சொலல் மிக இழிபே - பிரமப் பொருட்கு அவத்தைவந்ததெனக் கூறுதலானது மிக அநுசிதமாம், அவத்தை வரக் காரணம் என் - (சச்சிதாநந்தப்பொருட்கு) அவத்தை வரக் காரணம் என்னையோ?, வித்தை விளக்கு - இதன்மூலத்தை வெளிப்படுத்தியருளுக வென்பதாம். வித்து - மூலம். வித்தைஎனக் கொண்டு மெய்ஞானம், தந்திரம் என்றலுமாம்.

கூ௯. இதன்பொருள்:—ஒருபொன் பலபணி ஆமாறு பிரமம் உலகு உயிர் ஈசன் என்று ஆம் என்பார் ஒரு பொன்னே பல ஆபரணங்களாதல்போலப் பிரமமொன்றே சகமென்றும் சீவனென்றும் ஈசனென்றும் நாமபேதப்பட்டு நிற்குமென்று (ஏகான்மவாதிகள்) கூறுவர், கம்மியர் இன்றிப் பணி பிறந்திடுமோ - அப்பொன் கம்மாளராகிய செய்வோரையின்றித் தானே பல ஆபரணங்களாக உற்பவித்துக்கொள்ளுமோ? இல்லை, (ஆகவே பொன்னென்று செய்வோனென்றெனப் பட்டுப் பதார்த்தம் பலவாதல் தானே போதருதலாற் பிரமமொன்றைத் தவிர ஏனையவெல்லாம் மித்தையென்னும் அவர்வாதம் அவர்காட்டிய வுவமையாலே அடிபட்டவாறு காண்க.) இனி, அப்பொற்பணியுவமை ஏகதேசவுவமையாம், பொன் சடப்பொருளாதலிற் றானே யுற்பவிக்கு மாற்றலின்றித் தனக்கொருசெய்வோனை வேண்டிற்று; பிரமம் சேதனப்பொருளாகலானும், தனக்குமேலொரு தலைவனின்மையானும், தான் சுவேச்சையாற் பலவாயிற்று என்றொரு சமாதானங் கூறுவரேல், அஃதொருசாரிருக்கட்டும்.) அறிவு உயர் வத்து உலகு ஆயது என் பொன் இரும்பு ஆவது உண்டோ - அறிவானுயர்ந்த சுத்தசைதந்நியப் பிரமமானது (அகாரணமாய்ப் பலவான அம்மட்டிலமையாமல்) அசேதனப் பிரபஞ்சமாயும் வந்தது என்னை?, உயர்ந்த பொன்னனது தாழ்ந்த அந்நியசாதி யிரும்பாலாய ஆபரணமாக ஆவதுமுண்டோ?

ஒன்றே பொருள்பல் லுயிரா யவத்தையி னுற்றதென்பர்
தொன்றே தவத்தை சுகப்பொருட் கென்னிற் சுபாவத்திலை
யென்றே பிதற்றுவர் சொல்லியென் னாவ தியல்பில்லதை
மின்றே சுருவ கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கரு௪

இல்லை; (ஆகலான்) அவர் கொள்கை மிருது போம் - அவரது கோட்பாடு மிகவிலேசு; நிலைக்காது என்பதாம். ஓகாரம்இரண்டும் எதிர்மறைப் பொருளில் வந்தன. மேற்கூறியவாதிகள் பொற்பணியுவமைகோடலை "சுடுபசும் பொன்னே செய்கையாற் பலவாஞ் சுடரிழை யுருவுகொள் வதுபோற், படியறு சித்தே முன்சொல்சீ வாதி பலவுமாம்" என்னும் வேதாந்தசூடாமணிச் செய்யுளானறிக.

கரு௪. இதன்பொருள்:— பொருள் ஒன்றே - பிரமம் என்னும் வத்துவொன்றேயாம்; அவத்தையில் பல் உயிராய் உற்றது என்பர் அப்பொருள் அவஸ்தாவசத்தாற் பற்பல சீவனுகவந்தது என்று (ஏகான்மவாதிகள்) கூறுவர்; சுகப்பொருட்கு அவத்தை தொன்றுவது - ஆநந்தமய வத்துவிற்கு அவத்தை பண்டுண்டானது எதனால், என்னில் - என்று யாம் மீட்டுவினவினால், சுபாவத்து இல்லை என்றே பிதற்றுவர் - அப்பொருட்கு இயற்கையில் உண்டாதலில்லை என்றே விடாதுபேசுவர்; இயல்பு இல்லதைச் சொல்லி ஆவது என் - சுபாவத்தில் இல்லாததைக் கூறிப் பயன்படுவது என்னே? கூறுக,— மின் தேசு உருவ - மின்னலையும் சூரியனையும் ஒத்த பிரகாசத் திருமேனியையுடையாய்! என்றவாறு. சுபாவம் - இயற்கை. பிதற்றுதல் - விடாதுபேசல். தேசு-சூரியன். அவ்வேகான்மவாதிகள் ஒருபொருளே பல்லுயிராய் அவஸ்தாவசத்தாலுற்றதெனக் கொள்ளுங் கொள்கையை வேதாந்தசூடாமணியில் "அப்பரற் குபாதி யாகிய வுலககா ரணியா மாயை" எனக் கூறியிருத்தலானும், பஞ்சதசப்பிரகரணத்தில் ஐந்தாவது நாடகதீபத்தில் வரும் வாக்கியத்தானும் அறிக. அக்கொள்கை கூடாதென்பதனை "ஒன்றெனின் வீடுமின் றுண்டேனும் லீலையாற், பின்றையுஞ் சாருமென் றுந்தீபற, பெத்த மனித்தம்வீ டுந்தீபற" என்னும் அவிரோதவுந்தியார்ச் செய்யுளானுணர்க.

சுத்தசை தந்நிய வத்துவின் கட்சகந் தோன்றுமென்பர்
சித்து ளசித்துப் பிறவாது தூலசித் தாஞ்சத்துயிர்
வத்துள் வியாப்பிய மாமவை பற்றுபு மன்னுமலம்
வித்தென றேற்று கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௩௫

சிலந்தியு ணூலு மெருவுட் புழுவுஞ் செனிப்பதுபோ
லிலங்கார் பிரமத் துலகு மவித்தையி லின்னுயிருந்
துலங்குமென் பார்சட மூலத்தி லச்சடந் தோன்றுமெனல்
விலங்கலிற் றீபங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௩௬

---

௧௩௫. இதன்பொருள்:—சுத்தசைதந்நிய வத்துவின்கட் சகம் தோன்றும் என்பர் - நிர்மலஞானமயமாகிய பிரமத்தினிடத்தினின்றும் உலகம் தோன்றாநிற்குமென்று (ஏகான்மவாதிகள்) கூறுவர்; சித்துள் அசித்துப் பிறவாது - சேதநவஸ்துவுள்ளிருந்தும் அசேதநப் பிரபஞ்சம் உண்டாதலில்லை; தூலசித்து சத்து ஆம் உயிர் வத்துள் வியாப்பியம் ஆம் - தூலசித்துப்பொருளாயும் நித்தியப்பொருளாயும் உள்ள ஆன்மாக்கள் பதிப்பொருளினுள்ளே அடங்கி நிற்பனவாம்; அவை பற்றுபு மன்னும் மலம் வித்து எனல் தேற்று - அச்சீவராசிகளைப் பற்றிநிற்கு மாயாமலமே உலகத்தோற்றத்திற்கு வித்தாமென்றலை யறிவுறுப்பாயாக என்றவாறு. மலம் என்றது இங்கே மாயாமலத்தை.

௧௩௬. இதன்பொருள்:—சிலந்தியுள் நூலும் எருவுள் புழுவும் செனிப்பதுபோல் பிரமத்து உலகும் அவித்தையில் இன் உயிரும் துலங்கும் என்பார் - சித்தாகிய சிலந்திப்பூச்சியினின்று சடமாகிய ஊர்ணையும் சடமாகிய எருவினிடத்தினின்று சித்தாகிய புழுவும் உண்டாதல்போலச் சித்துப்பொருளாகிய பிரமத்தினிடத்துச் சடப்பொருளாகிய பிரபஞ்சமும் சடப்பொருளாகிய அவித்தையினிடத்துச் சித்துப்பொருளாகிய இனிய சீவனும் தோன்றி விளங்காநிற்குமென்று (ஏகான்மவாதிகள்) கூறுவர்; சடமூலத்தில் அச்சடம் தோன்றும் என்னல் இலங்கார் - சடமாகிய காரணத்தினின்றும் அச்சடத்தினது காரியப்பொருடோன்றுமென்றலை விளங்காதவராயினர்; விலங்கலில் தீபம் - (இது யாவரும் எளிதிலுணரும்படி) மலைமேலேற்றிய தீபமாம் என்றவாறு. நூலுக்குச் சிலந்திப் பூச்சியினதுடம்பு காரணமேயன்றி அவ்வான்மாவன்று; புழுவினதுடம்புக்கு எருக்காரணமேயன்றி அதனிடத்துள்ள ஆன்மாவிற்கன்று; ஆதலாற் சடத்திற் சடம்

அப்பிரங்க கீடத் தகம்பிர மக்கோ ளமைப்பர்சில
ரப்புழுச் சீவ னவிந்தன்னை வண்டொடொன் றுவதில்லை
யொப்புரு மேமிது சாரூப் பியத்திற் குவமையதாம்
மெய்ப்பொருள் காட்டு கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

தோன்றிற்றெனக்கொள்க. பிரமத்துலகும் அவித்தையிலுயிருந்தோன் றுமென அவ்வாதிகள் கோடலை வேதாந்தசூடாமணியில் "கடத்தி னுக்கு மண்ணினையு நூற்குலண்டு தனையுங் காரணமென் பதுபோலப் பிரமமே முன்னம், படைத்தசகத் காரணமென் பதுவேதிட் டாந்தம்" எனவும், "அவித்தையில் விம்பித் துள்ள வாருயிர்" எனவும் கூறு மாற்றானறிக.

க௯எ. இதன்பொருள்:—சிலர் அகம்பிரமக்கோள் அப் பிர்ங்க கீடத்து அமைப்பர் - (ஏகான்மவாதிகளாகிய) சிலர் அகம்பிரமக்கொள் கையை அந்தப் பிருங்ககீடநியாய உதாரணத்தின்கண்ணே பொருத்திக் கூறுவர்; (அவர் கூற்றுப்பொருந்தாது, ஏனெனில்,) அப்புழு சீவன் அவிந்து அன்னை வண்டொடு ஒன்றுவது இல்லை - அந்தப்புழுவானது உயிரொழிந்து (தன்னை யெடுத்துவந்து வைத்து வளர்த்த) தாய்க் குளவியோடு சேர்ந்தொருவஸ்துவாதலில்லை; ஆகலான்,) ஒப்பு உரு மேம் - தான் வேறொரு குளவியாய் அத்தாய்க்குளவியின் சமானவடி வத்தைப் பொருந்தாநிற்கும்; இது சாரூப்பியத்திற்கு உவமையது ஆம் - (அவர்மேற்காட்டிய) இந்த உதாரணம் சாரூப்பியபதவிக்கு உவ மானமாகும், மெய்ப்பொருள் காட்டு - அதனால் உண்மைப்பொருளை அடியேங்கட்கறிவிப்பாயாக வென்றவாறு. பிர்ங்கம் - குளவி. கீடம் - புழு. மேவும் என்பது இலக்கணவிதியான் மேம் என வந்தது. உவமை யது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. ஏகான்மவாதிகள் பிருங்க கீட நியாயத்தை அகம்பிரமமாதற்குவமையாக வெடுத்துக்கொண் டிருத்தலை, "சகீடகோ நரோயாதி சத்பாவம் ஹ்யேகநிஷ்டயா, கீட கோ ப்ரமரம் த்யாயந்நு ப்ரமரத்வாய கல்பதே" எனவும், "க்ரியாந் தரா சக்தி மபாஸ்ய கீடகோ த்யாயந்நளித்துவம் ஹ்யளிபாவ ம்ருச் சுதி, ததைவ யோகீ பரமாத்ம தத்வம் த்யாத்வா சமாயாதி ததேக நிஷ்டயா" எனவும் வரும் விவேகசூடாமணி ௫௬௧, ௫௬௨ - ஆவது சுலோகங்களானறிக. சாரூப்பியத்திற்குவமைகூறுதலே சித்தாந்தபக்ஷ மென்பதை, "புக்கழுந்தின ரெமதருப் பெறுவர் புவியில் வேட்டுவ னெடுத்தமென் புழுப்போல்" எனவரும் திருவாதவூரடிகள் புராணச் செய்யுளானறிக.

குடத்துள் வெளிமேல் வெளியொடு கூடுதல் போலுமுத்தி
குடத்துருத் தூலமென் பார்விண் பிரித்திவர் கூறவந்த
குடத்துருக் கேதுவென் விட்பிரி வேதது கூடலெத்தை
விடுத்துரை தேற்று கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

கசுஅ. இதன்பொருள்:—குடத்து உள்வெளி மேல்வெளியொடு கூடுதல்போலும் முத்தி குடத்து உரு தூலம் என்பார் - கடாகாசமானது மகத்தாகாசத்தோடு (கடமுடைந்தவழி) ஒன்றுதல்போல்வதாகும் (உடம்புநீங்கியவழிச் சீவனும் பிரமமுங் கூடும்) மோக்ஷம், குடத்து உரு தூலம் என்பார் - குடத்தின் வடிவானது (உயிரினது) தூலதேகமாம் என்று கூறுவர் (ஏகான்மவாதிகள்); விண் பிரித்து இவர் கூற வந்த குடத்து உருக்கு ஏது என் - இரண்டுபடாத ஆகாசத்தை இரண்டுபடப் பிரித்து இவர் கூறும்படி சம்பவித்த குடத்துருத்தோற்றத்திற்குக் காரணம் என்னை ?,--விண் பிரிவு ஏது - (முன்னும்பின்னும் பிரியாத) ஆகாசம்பிரிதல் எப்படி ? அது எத்தை கூடல் - அவ்வொன்றேயான ஆகாசம் எதனைக் கூடுதல் ? உரை விடுத்துத் தேற்று - உனது திருவாக்கினால் வெளிவிட்டுத் தெளிவிப்பாயாக என்றவாறு. "இனி உரைவிடுத்துத் தேற்று" என்பதற்கு மௌனமாகிய சிந்முத்திராவியாக்யானத்தினாற் றெளிவிப்பாயாக வென்பதும் ஒருபொருள். ஏகான்மவாதிகள் அவ்வாறு கூறுமாற்றை "கடவடிவு தூலசடங் கடசலமே கரணங் கடசலத்தி லழுக்கவித்தை கடசலவான் சீவன், கடவெளிமேல் வெளிசாட்சி சத்தாமிவ் விரண்டுங் கடசலம்போற் றநுகரணங் கலங்கினுந்தான் கலங்காக், கடசலம்வற்றுநிழல் போலாசையினா லவித்தை கலந்துநின்ற திரவியெதிர் கடசலம்போயுளதாங், கடவெளிமேல் வெளிபோற்சற் குருவருளா னொன்றுங் கரந்து சட சாட்சிசத்தாய்க் காண்பதத்து விதமே" என்னுஞ் சொரூபாநந்தோபநிடதச் செய்யுளானும், "படியில் வந்த பரம குரவனாற், றனையறும்படி தன்னை யறிந்தவ, னுடல்வி டும்பொழு தொன்றொரு மண்மயக், கடமு டைந்தவா காயமி கர்ப்பனால்" என்னும் பிரபுலிங்கலீலைச் செய்யுளானுமறிக.

ஒன்ப துருநிற் கருள்வடி வாகு முயிர்நித்திய
மென்ப தறிந்திலர் கூறின ரென்னுயி ரீசனுக்குப்
பம்பிய மாயை யவித்தை யிரண்டில்விம் பப்பிரதி
விம்ப நியாயங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௫௯

௧௫௯. இதன்பொருள்:—ஒன்பது உரு நிற்கு அருள் வடிவு ஆகும் உயிர் நித்தியம் ஆகும் என்பது அறிந்திலர் - நவவடிவங்களும் உனக்குக் (கிருதகாடிந்நிய நியாயம்பற்றிவந்த) திருவருள் வடிவங்களாகும் சர்வான்மாக்களும் நித்தியப்பொருளாகும் என்னும் உண்மையையறியாத (ஏகான்மவாதிகளாகிய) சிலர், பம்பிய மாயை அவித்தை இரண்டில் ஈசனுக்கு உயிர்க்கு விம்பப்பிரதிவிம்ப நியாயம் கூறினர் என் - பரந்தமாயையும் அவித்தையும் ஆகிய இரண்டினும் பிரதி விம்பித்தவர்களாக ஈசனுக்கும் சீவனுக்கும் விம்பப்பிரதிவிம்ப நியாயம் உரைத்தனர் (இவரறியாமையிருந்தபடி) என்னை? என்றவாறு. இவரறியாமையிருந்தபடி என்னை ? என்பது இசையெச்சம். ஆகும் என்பது நித்தியத்தோடும், குவ்வுருபு உயிரோடுங் கூட்டப்பட்டன. எண்ணும்மைகள் விகாரத்தாற்றொக்கன. ஈசுவரனை மாயாப்பிரதிவிம்பனெனவும், சீவனை அவித்தியாப் பிரதிவிம்பனெனவும் கொள்ளும் ஏகான்மவாதிகளது கொள்கையை வேதாந்தசூடாமணியில், "மாயை * * * * மேயவதிற் பிரமசை தன்யம்விம் பித்திதுவே விளங்கு ஞானத், தூயசைதன் னிய வீசன் பதியென் றிடநிற்குந் துணிவு தன்னால்" எனவும், "அவித்தையில் விம்பித் துள்ள வாருயிர்" எனவும் கூறியிருத்தலானும், "பஞ்சதசப் பிரகரணத்தில் முதலாவது சித்திரதீபத்தில்" வரும் வாக்கியத்தானும் அறிக. நவவடிவங்களை "சிவஞ்சத்தி நாதம் விந்து சதாசிவன் றிகழு மீச, னுவந்தரு ளுருத்தி ரன்றான் மாலய னென்றி னொன் றுருப், பவந்தரு மருவ நாலிங் குருவநா லுபய மொன்று, நவந்தரு பேத மேக நாதனே நடிப்ப னென்பர்" என்னுஞ் சிவஞானசித்தித்திருவிருத்தத்தாலுணர்க. ஈசனுருவம் மாயாப்பிரதிவிம்பப் பொய்வடிவமன்று கிருபாமயசொரூபமென்பதனையும், உயிர்நித்தியமென்பதனையும், "உருவருள் குணங்களோடு முணர்வரு ளுருவிற் றோன்றுங், கருமமு மருள ரன்றன் கரசர ணாதி சாங்கந், தருமரு ளுபாங்க மெல்லாந் தானரு ளனக்கொன் றின்றி, யருளுரு வுயிருக் கென்றே யாக்கின னசிந்த னன்றே" எனவும் "உருமேனி தரித்துக் கொண்ட தென்றலு முருவிறந்த, வருமேனி யதுவுங் கண்டோ மருவுரு வான போது, திரு

இலேகைமுன் னேவரை யப்படு பேட்டி லிபிக்குரிய
சலாகை கொடுவரைந் தாலொப்ப முன்றிரி பாமதக்கோ
ணிலாவினர்க் குச்சைவ நீர்மை சொலினைய நீண்டுகொளார்
விலாசவுல் லாச கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௪0

உன்மய மாம்பொழு தில்லை யுலக முலகமயத்
துன்மய மில்லை யுதுசாத் தியத்திலென் பார்களுயி
ருண்மையத் தான்மயப் பட்டதொன் றுண்டென் றுணரினுறும்
வெண்மையர் தேறார் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

மேனி யுபயம் பெற்றோஞ் செப்பிய மூன்று நந்தங், கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே" எனவும், "ஆரண மாகமங்க ளருளினா லுருவு கொண்டு" எனவும், "அறிவிக்க வறித லானு மழிவின்றி நிற்ற லானுங், குறிபெற்ற சித்துஞ் சத்துங் கூறுவ துயிருக்கு" எனவும் வரும் சிவஞானசித்தித் திருவிருத்தங்களானுணர்க.

௧௪0. இலேகை - எழுத்து. இலிபி என்பதும் அது. சலாகை - கம்பி. இலிபிக்குரிய சலாகை எனவே எழுத்தாணி எனப்பொருள் தரும். திரிபு ஆம் மதக்கோள் - துற்பலத்தைப் பிரபலமாகக்கருதும் வேறுபாடாகிய மதக்கொள்கை. சைவ நீர்மை - சைவசமயப்பண்பு. ஐயம் - சந்தேகம். விலாசம்-பரப்பு; இதனை "சிற்சுகோதய விலாசமே" என்னும் தாயுமானசுவாமிபாடலானறிக. உல்லாசம் - ஆநந்தம். இதனை "உல்லா சநிரா குலயோ கவிதச், சல்லா பவினோ தனுநீ யலையோ" என்னுங் கந்தரனுபூதிச் செய்யுளானறிக. விலாசவுல்லாச என்பதற்கு எண்குணத்துளொன்றாய வரம்பிலின்ப முடையாய் எனப்பொருள் கொள்க. இங்கே "தத்த மாற்றங்க ணிறுவிய சமயிகள் பலருங், கத்து புன்சொலை வினவின ரவன்செயல் காணார், சுத்த வாதுள முதலிய தந்திரத் தொகுதி, யுய்த்து ணர்ந்திடு நீரரே யொருசிறி துணர்வார்" என்னுங் கந்தபுராணச் செய்யுள் சிந்திக்கற்பாலது.

௧௪௧. உது - சுட்டுப்பெயர். சாத்தியம் - சாதனத்தாலுறுதிப்பட்டது. உயிருண்மை - ஆன்மாவுளதாந்தன்மை. அத்தால் - அவர் மேற்கூறிய அந்தச் சொல்லால். உண்மை என்னும் பண்புப்பெயர் உறுமென்னும் பயனிலை கொண்டது. மயப்பட்டது - மேற்கூறிய உன்மயம் உலகமயம் என்னும் இரண்டினும் பருவத்திற் கேற்றபடி ஒவ்

[சர்வமும் பிரம்மமென்னும் வேதவாக்கிய தாற்பரியம்.]

அளப்பி லுயிருஞ் சகமும் பிரமமன் றஃதவையென்
றிழைக்கு நிகமம் வியாபகம் பற்றி யிதுமுகமன்
றழைக்கு முதாரணந் தீப மிருந்த தகளியையும்
விளக்கெனல் போலுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

வொன்றின் வசமாய் நின்றபொருள்; அது ஆன்மா. பதிபாசங்களுள் ஒன்றைப்பற்றிய ஆன்மா தான் பற்றப்படுபொருளின் மயமாய் அதனோடியைந்திருத்தலை "முன்பு - தனிமல வாணவத்திற் றங்கியாங்கிருக்க வென்று, நனியருண் ஞான நல்கி நம்பிரான் மறைந்து போனான்" என்னும்விநாயகபுராணச்செய்யுளானும் "மரத்தை மறைத்தது மாமத யானை, மரத்துண் மறைந்தது மாமத யானை, பரத்தை மறைத்தது பார்முதற் பூதம், பரத்துண் மறைந்தது பார்முதற் பூதம்" என்னும் திருமந்திரத்தானும் "ஆணவத்தோ டத்துவித மானதுபோன் மெய்ஞ்ஞானத்,தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ" என்னும் தாயுமானசுவாமிபாடலானும் "பெத்தர்க் கொருசிவ மின்மையிற் பேருண். முத்தர்க் குலகுமின் றுந்தீபற, முழுதுஞ் சிவமாத லுந்தீபற" என்னும் அவிரோதவுந்தியார்ச் செய்யுளானும் அறிக. வெண்மையார் தேறார்—இதனை வெள்ளறிவுடையார் அறியார் என்க.

கசஉ. இதன்பொருள்:—அளப்பு இல் உயிரும் சகமும் பிரமம் அன்று - கணக்கற்ற சீவகோடிகளும் பிரபஞ்சமும் பிரமமல்ல; அஃது அவை என்று நிகமம் வியாபகம் பற்றி இழைக்கும் - அப்பிரமமே சீவசகங்களாகிய அவைகளென்று வேதமானது (பிரமம் சீவசகங்களிற்) கலந்து நிற்குமொற்றுமை நயம்பற்றி உரைசெய்யும்; இது முகமன் - (ஆகலான்) இவ்வேதவுரை உபசாரமாம்; தழைக்கும் உதாரணம் - (உபசாரமென்ற அதனை) விளக்கத்தக்க எடுத்துக்காட்டாவது, தீபம் இருந்த தகளியையும் விளக்கு என்னல் போலும் - சுடர்தங்கிய அகலையும் (இவ்வுலகோர்) விளக்கு என்று கூறுதலை ஒக்கும் என்றவாறு. இழைத்தல் - வரையறுத்தல்; இப்பொருள்கோளை "இழைத்தநாளெல்லை கடப்ப தென்றால்" எனவரும் தேவாரத்தானும் "இழைத்தநாளெல்லை யிகவா பிழைத்தொரீஇ" எனவரும் நாலடியார்ச் செய்யுளானும் அறிக. வேதம் இவ்வாறு கூறுதலை "ஸர்வம் கல்விதம் ப்ர்ஹ்ம"

[சிவோகம் பாவனையின் றற்பரியம்.]

புநித மறைமலம் பொன்றச் சிவோகம் புகலுமத்தா
லநித வுயிர்வத் தழியா சிவமய மாகுமுன்பா
வனையின் விடகாரி மாய்க்க விடத்தைத்தான் மாய்வதின்றி
விநதை மகனுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கசரு

---

என்னும் சாந்தோக்யோபநிஷத்து வாக்கியத்தானறிக; கூறினமை உபசாரமென்பதனையும் ஏகான்மவாதிகள் கூறும் சீவப்பிரமவாதம் பொருந்தா தென்பதனையும் "மாயையைத் தொழிற்செய் தியக்கிட வந்த மாயையிற் கலந்துநிற் றலினுன், மாயையைக் கடந்த வவர் தமை மாயா சொரூபியென் றுரைவழங் குதல்போ, லாயவெப் பொருளும் விரவிநிற் றலினு தைத்தகு மொற்றுமை நோக்கி, மேயநல் லுபசா ரத்தினு லெவையு மேதகு பிரமமென் றதுவே", "தங்குமொற் றுமையாற் சொன்னதே யன்றிச் சகலரும் பிரமமோ வாகார், மங் குத லின்றிச் சகலமும்பிரம மயமெனுஞ் சுருதியி னருத்த, மெங்கணு மெந்தப் பொருளினு மிறைவ ரியைந்துடன் மன்னுகின் றுரென், றங்கவர் தன்மை யுரைத்ததே யாகு மதுவன்றி யொன்றென்ற தன் றே" என்னும் விநாயகபுராணச் செய்யுட்களானும் "விளக்குந் தகளி யையும் வேறென்ஞர் நின்னைத், துளக்கமறச் சீவனென்று சொல் வார் பராபரமே", "வானுதி நீயெனவே வைத்தமறை யென்னையுநீ, தானுகச் சொல்லதோ சாற்முய் பராபரமே" எனவரும் தாயுமான சுவாமி பாடல்களானுமறிக.

கசரு. இதன்பொருள்:—விடகாரி விடத்தை மாய்க்க தான் மாய் வது இன்றி விநதைமகன் ஆம்-விடத்தைப் போக்கும் மாந்திரிகனுன வன் அவ்விடத்தைப் போக்கும்பொருட்டுத் தான் கெடுதலின்றி (முன் பயின்று வந்த கருடபாவனையாற்) கருடனுவான், (அதுபோல) புநிதம் மறை மலம் பொன்றச் சிவோகம் புகலும் - பரிசுத்தமாகிய வேதங்கள் ஆன்மாக்களினுடைய ஆணவமலம் கெட்டொழியும் பொருட்டுச் சிவோகம் பாவனையை விதிக்கும், அத்தால் அநிதம் உயிர் வத்து அழியா - அச்சிவோகம் பாவனையினுல் அளவில்லாதனவாகிய ஆன் மாக்கள் பதார்த்த சூநியமாகாவாம், சிவமயம் ஆகும் - (பெத்தநிலை யில் தாம் எவ்வாறு மலத்தொடுகூடி மலமயமாய் நின்றனவோ, அவ்

## இதுமுதல் ௧௭ - செய்யுள், சைவசித்தாந்தத்தின் உயர்வு.
[முப்பொருளுண்மை.]

சுருக்கத் துணர்த்திற்று முப்பொரு ணிச்சயந் தூயர்கொள்பாக்
கிருக்கு நிகமம் பறவை யிரண்டுண் டிவற்றுளொன்றங்
கிருக்கும் பலமுண மற்றைய தோபார்த் திருக்குமொரு
விருக்கத்தி லென்று கலங்கா தகண்டவென் விண்ணப்பமே. ௧௪௪

வாறே முத்திநிலையிற் சிவத்தொடு கூடிச் சிவமயமாய் நிற்கும் என்றவாறு. புநிதம் - பரிசுத்தம். அநிதம் அளவுபடாமை, இதனை "அநித கோடி யணிமுடி மாலையும்" எனவரும் பெரியபுராணச் செய்யுளானறிக. விடகாரி - விடத்தைப்போக்குவோன். விநதை - கருடனுடைய தாய்; விநதையின் புதல்வனென்னும் பொருள்பயக்கும் வைநதேயன் என்பது கருடனின் பரியாய நாமத்துளொன்றாயிருத்தலையுங்காண்க இச்செய்யுள் "கண்டவிவை யல்லேனு, னென்றகன்று காணுக் கழிபரமு நானல்லே னெனவுருகிக் கசிந்த, தொண்டினொடு முளத்தவன்றா னின்றகலப் பாலே சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றின்றி, விண்டகலு மலங்களெல்லாங் கருடதியா னத்தால் விடமொழியு மதுபோல விமலதையு மடையும், பண்டைமறை களுமதுநா னானேனென்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே" என்னுஞ் சிவஞானசித்தித்திருவிருத்தக் கருத்துவைத்தோதப் பெற்றது.

௧௪௪. இதன்பொருள்:—இருக்கு நிகமம் - (முதலாவதாகிய) இருக்குவேதமானது, முப்பொருள் நிச்சயம் தூயர் சுருக்கத்துக் கொள்பாக்கு - பதி பசு பாச வுண்மையைப் பக்குவர்கள் சங்கிரஹத் துணர்ந்துகொள்ளும்படிக்கு, ஒரு விருக்கத்தில் இரண்டு பறவை உண்டு இவற்றுள் ஒன்று அங்கு இருக்கும்பலம் உண்ண மற்றையதோ பார்த்திருக்கும் என்று உணர்த்திற்று - சரீரமாகிய ஒரு அரசமரத்தின்கண்ணே சீவனும் ஈசனுமாகிய இரண்டுபக்ஷிகள் கூடிவசிக்கின்றன இவைகளுட் சீவனாகிய ஒருபக்ஷி அங்குள்ளதாகிய வினைப்பயன்களைப்புசிக்க ஈசனாகிய ஏனைப்பக்ஷியோ சாக்ஷியாகப் பார்த்துக்கொண்டிருக்கின்றது என்று அறிவித்தது என்றவாறு. இவ்வாறு இருக்கு வேதங் கூறுமாற்றை "இருக்குவேதத்தில் முதலாம் மண்டலத்தில் ௧௬௪ - ஆம் சூக்தத்து ௨0-ஆம் மந்திரத்தால் அறிக; இவ்வாறே தசோபநிஷத்துளொன்றாகிய முண்டகோபநிஷத்தில் (௩) வது முண்

[இதுவுமது]

உடையா னடிமை மலமுள் பொருளென் றுணர்ந்திடலாந்
தொடரூ ழிலாதவர் காணார் சிவாலயந் தோறிருந்து
தடையின் றுணர்த்தும் பதிபசு பாசந் தமையிலிங்கம்
விடைபலி பீடங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௪௫

---

டகத்தில் (௧) வது கண்டத்தில் (௧) வது மந்திரத்திலும் கூறப்பட்டிருக்கின்றது; இக்கருத்துப்பற்றியே பாகவதபுராணத்தில் "மாயையென் றுரைக்கும் வித்தினிற் பிறந்து மருவுமுக் குணப்பரா ரையின் மேன், மேயவிந் தியவோர் பதுசினை விடுத்து வேட்கையாம் வேர்பல வுடைத்தாச், சேயுயர்ந் திரண்டு வினைப்பயன் பழுத்துச் சீவனே டீசனென் றுரைக்குந், தூயபொற் பறவை யிரண்டுட னிருப்பத் துலங்குமா லாக்கையந் தருவே" எனவும், "சொல்லிரு வினையின் பயனெனும் பழத்தைத் தோற்றுறு சீவனும் பறவை, புல்லிநின் றருந்து மீசனும் பறவை புசித்திடா துணர்ந்துகொண் டிருக்கு, நல்லெழிற் குருவான் ஞானவா டீட்டி நவிற்றுடற் றருவறத் தடிந்தான், மல்லுயர் புயத்தோய் பிறிந்திடு பொன்று வரம்பிலா வின்பமும் வருமே" எனவும் கூறப்பட்டதூஉங் காண்க.

௧௪௫. இதன்பொருள்:—உடையான் அடிமை மலம் உள்பொருள் என்று உணர்ந்திடலாம் - ஆண்டானும் அடிமையும் ஆணவமலமும் ஆகிய மூன்றும் நித்தியப்பொருள்களென்று அறியலாம், தொடர் ஊழ் இலாதவர் காணார் - பண்டே தொடர்ச்சியாய்வந்த ஆகூழில்லாதவர்கள் அறியார், சிவாலயந்தோறும் தடையின்று இருந்து இலிங்கம் விடை பலிபீடம் பதி பசு பாசம் தமை உணர்த்தும் - சிவாலயங்கடோறும் [நாத்திகம் ஏகான்மவாதம் முதலிய புறமதத்] தடை இல்லையாம்படி சாக்ஷியாக இருந்துகொண்டு இலிங்கவடிவு பதிப்பொருளையும் நந்திதேவவடிவு பசுவையும், பலிபீடவடிவு பாசத்தையும் அறிவிக்கும் என்றவாறு. தோறும் என்பதில் உம்மை விகாரத்தாற்றொக்கது. ஊழ் தொடருந்தன்மைத்தாதலை "பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று, வல்லதாந் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப், பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த; கிழவனை நாடிக் கொளற்கு" என்னும் நாலடியார்ச் செய்யுளானறிக. மேற்கூறியவாறு இலிங்காதிமூன்றும் பதியாதிமூன்றைக் குறித்திருத்தலை "ஆய பதிதா னருட்சிவ லிங்கமாம்,

[பெத்தம்.]

பௌவ வெளியும் வெளியுட் பயமும் பயத்துளுப்பு
மொவ்வும் பதிபசு பாசம் வெளியை யுறாதுறையைக்
கௌவு முவரிற் பதிநீத் துயிரைக் கலக்குமலம்
வெவ்விய பெத்திற் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கசசு

[முத்தி.]

சத்து மசத்துஞ் சதசத்து மாமுத் தவாப்பொருளுட்
சித்தொடு சித்துக் கலப்ப வசித்துச் செயலழிய
வத்துவி தாநந்தஞ் சீவன் சிவமய மாதல்விளை
வித்தருள் செய்தி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கசஎ

---

ஆய பசுவு மடலே றெனநிற்கும், ஆய பலிபீட மாகுநற் பாசமாம், ஆயவரனிலை யாய்ந்துகொள்வார்க்கே" என்னுந் திருமந்திரத்தானறிக.

கசசு. இதன்பொருள்:—வெவ்விய பெத்தில் - கொடிய பெத்த தசையின்கண்ணே, பதி பௌவவெளியும் பசு வெளியுட் பயமும் பாசம் பயத்துள் உப்பும் ஒவ்வும் - பதியானது கடலினது வெளியையும் பசுவானது அவ்வெளியினுள்ள நீரையும் பாசமானது அந்நீரினுள்ள உப்பையும் ஒத்து ஒன்றினுள்ளொன்று வியாப்பியமாயிருக்கும் (இருக்குமேனும்), வெளியை உறாது உறையைக் கௌவும் உவரில் - கடல்வெளியைப் பற்றலாற்றாது நீரைமட்டும்பற்றிநிற்கும் உப்பினைப்போல, மலம் பதி நீத்து உயிரைக் கலக்கும் - பாசமானது பதியைப்பற்றாதொழித்துப் பசுவினையே விரவிநிற்கு மென்றவாறு. இதனை, "சுத்தமெய்ஞ் ஞான மேனிச் சோதிபா லசத்தஞ் ஞான, மொத்துறா குற்ற மெல்லா முற்றிடு முயிரின் கண்ணே, சத்துள போதே வேறாஞ் சதசத்து மசத்து மெல்லாம், வைத்திடு மநாதி யாக வாரிநீர் லவணம் போலும்" என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானுணர்க. பெத்தத்தில் என்றது இங்கே பெத்தில் எனவந்தது; "பெத்தின்றி யைந்து தொழிலானு முத்தி பெறவாடு கின்ற பெருமʼ என்னும் விநாயகபுராணச் செய்யுளில் வந்தாற்போல.

கசஎ. இதன்பொருள்:—சத்தும் அசத்தும் சதசத்தும் ஆம் தவா முப்பொருள் உள் - சத்தெனப்படும் பதியும் அசத்தெனப்படும்

ஓதி புணரி னகர முதலவென் னொப்புமையோ
டாதி பகவன் முதற்றே யுலகென வீநிமித்த
னீதி வலையு நினையார் பலவாய் நிகழ்த்தினரா
வேதித மில்லார் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கசஅ

---

பாசமும் சதசத்தெனப்படும் பசுவும் ஆகிய கெடாத மூன்று பொருள்களுள்ளே, சித்தொடு சித்துக் கலப்ப - அநாதி முத்த சித்தெனப்படும் பதியும்அநாதிபெத்தசித்தெனப்படும் பசுவும் அளவளாவவும், அசித்து செயல் அழிய - சடமெனப்படும் பாசம் சேட்டையற்றொழியவும், சீவன் சிவமயம் ஆதல் அத்துவிதாநந்தம் - சீவன் சிவமயமாதலே சுத்தாத்துவிதாநந்தமாம், விளை வித்து அருள் - அவ்வாநந்தத்தை விளைவிக்கின்ற மூலம் உனது திருவருளேயாம், செய்தி - அவ்வருளை அடியேன் பெறும்படி செய்வாயாக என்றவாறு. பதி, சத்தாகிய சித்தெனப்படுதலைச் சிவஞானசித்தியாரில் "எங்குஞ், செறிசிவ மிரண்டுமின்றிச் சித்தொடு சத்தாய் நிற்கும்" எனக்கூறுமாற்றானும், பசு, சதசத்தாகிய சித்தெனப்படுதலை "சத்தசத் தறிவ தான்மாத் தான் சத்து மசத்து மன்று, நித்தனாய்ச் சதசத் தாகி நின்றிடு மிரண்டன் பாலும்" எனவும் "அறிவிக்க வறித லானு மழிவின்றி நிற்ற லானுங், குறிபெற்ற சித்துஞ் சத்துங் கூறுவ துயிருக்கு" எனவும் கூறுமாற்றானும், பாசம், அசத்தாகிய அசித்து எனப்படுதலை "அரனுளத்தே வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே"எனவும் "பின்புகாயஞ் சேராத வகைதானுந் தேயு மன்றே" எனவும் "அருக்கன் புகுதவிருள் போமடியிற் பொருந்தமலம் போமே" எனவும் "மருடன்றன் குணமதாகி மலமசித் தாகி நிற்கும்" எனவுங் கூறுமாற்றானும் அறிக.

கசஅ. இதன்பொருள்:—அகரம் முதல என் ஒப்புமையோடு ஆதிபகவன் முதற்றே யுலகு எனலை ஓதி உணரின் - (தெய்வப் புலமைத் திருவள்ளுவர் மொழிந்த) எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதலாக வுடையன என்கின்ற உவமானத்தோடு ஆதிபகவனாகிய முதல்வனை யுடைத்து உலகமென்னும் பொருளையுடைய முதற்குறளைக் கற்றறியுமிடத்து, நிமித்தன் நீ - நிமித்த காரணன் நீயே, திவலையும் நினையார் பலவாய் நிகழ்த்தினர்-(அதனை நல்வினை யின்மையாற்) சற்றுமெண்ணாதார் பற்பலவாகக் கூறினர், ஆவேதிதம் இல்லார்

உடற்குயிர் போல வுயிரிற் கலத்தலி னொன்றெனவு
முடன்முத னான்கு முயிருக் குதவி யுயர்பதிதான்
மிடலைந் தொழிற்கும் வினைமுத லாதலின் வேறெனவும்
விடலற நிற்குங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௪௯

அவர் உன்னாலறிவிக்கப் படுதலில்லாதவரே யாவர் என்றவாறு. ஆவேதிதம் = அறிவிக்கப்படுதல்; இது வடமொழி; இதனைப் பெறுதார் அறிய வல்லுநராகாமையை "காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே" எனவரும் தேவாரத்தானறிக.

௧௪௯. இதன்பொருள்:—உயர்பதி - (சர்வ வியாபகமாய் நிற்றலால் தத்தம் புவநாந்தம் வியாபித்த தேவர் யாவரினும்) உயர்ந்த பதிப் பொருளானது, உடற்கு உயிர்போல உயிரில்தான் கலத்தலின் ஒன்று எனவும் = கலப்பு விசேடத்தால் உடம்பினுக்கு உயிர் அபேதமாய் நின்றாற்போல உயிரில் தான் கலந்து நிற்றலினால் அவ்வுயிரே என்று சொல்லும் படிக்கும், உடல் முதல் நான்கும் உயிருக்கு உதவி மிடல் ஐந்தொழிற்கும் வினைமுதல் ஆதலின் வேறு எனவும் - தநுகரண புவநபோகம் என்னும் நான்கையும் உயிருக்குக்கொடுத்து ஆற்றலையுடைய சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அநுக்ரகமென்னும் பஞ்ச கிர்த்தியங்கட்கும் (அவைகளை இயற்றும்) வினைமுதலாய் நிற்றலினால் (பொருட்டன்மையின் அவ்வுயிர்களின்) வேறு என்னும் படிக்கும், விடல் அற நிற்கும் - இவ்விருதன்மைகளையும் விடாது வாசாமகோசரமாய் விளங்கா நிற்கும் என்றவாறு. இதனை "ஒன்றெனு மதனா லொன்றென் றுரைப்பதுண் டாகை யாலே, நின்றனன் வேறாய்த் தன்னி னீங்கிடா நிலைமை யாலே, பின்றிய வுணர்வுக் கெட்டாப் பெருமைய னறிவி னுள்ளே, யென்றுநின் றிடுத லாலே யிவனவ னென்ன லாமே" "உருவொடு கருவி யெல்லா முயிர்கொடு நின்று வேறாய், வருவது போல வீச னுயிர்களின் மருவி வாழ்வன், றருமுயி ரவனை யாகா வுயிரவை தானு மாகான், வருபவ னிவைதா னாயும் வேறுமாய் மன்னி, நின்றே" என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தங்களானும், "உடலினுக் குயிரே போல வுயிர்க்குயி ராளாய் போற்றி, யுடலுயிர்க் கறிவு நல்கி யுடலினைக் கழிப்பாய் போற்றி, யுடலுயி ரெனப்பி னீங்கா வொற்றுமைப் பொருளே போற்றி, யுடனுறை யுயிர்க்கு மெட்டா வொளிர் பெருஞ் சோதி போற்றி" என்னும் விநாயகபுராணச் செய்யுளானு மறிக.

கதிரவற் காணு திருளதைச் சூரியன் கண்டறியா
னெதிரு மவைகளை வேறுய சிற்றொளி யெய்தியகண்
பதிமல மொன்றைமற் றென்றறி யாதவை பற்றும்பசு
விதியிலர் தேருர் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கரு௦

இயற்கையிற் சிற்றொளி கண்கோடி கோடிக் கிருந்துமவை
யயற்பொருள் காண விரவியின் பேரொளி யாசிரித்தாங்
குயற்பெறுஞ் சிற்றறி வான்மாவு முற்றறி வுற்றசிவ
வியற்றுணை கொண்டு கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

கரு௦. இதன்பொருள்:—இருள் கதிரவன் காணது - இருளானது சூரியனைப் பார்த்தறியாது, சூரியன் அதைக் கண்டறியான் - சூரியனுனவன் அவ்விருளைப்பார்த்தறியான், வேறு ஆய சிற்றொளி எய்திய கண் அவைகளை எதிரும் - (பேரொளித் தன்மையும் இருட்டன்மையுமின்றி அவற்றின்) வேருகிய சிற்றொளியையுடையகண்கள் அவ்விரண்டனையும் எதிர்ப்பட்டறியும், (அதுபோல) பதி மலம் ஒன்றை மற்றொன்று அறியாது - முற்றறிவையுடையபதியும் சடமாகிய பாசமும் ஆகிய இரண்டும் ஒன்றை மற்றொன்று பரஸ்பரம் அறியமாட்டாதனவாம், பசு அவை பற்றும் - சிற்றறிவையுடைய பசுவானது பதி பாசங்களாகிய அவ்விரண்டனையும் தனித்தனி பற்றி நின்றறியும், விதி இலர் தேருர் - இவ்வுண்மையறியக்கூடிய நல்லூழில்லாதவர் தெரியார் என்றவாறு. இதனை "யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற், சத்தே யறியா தசத்தில தறியா, திருதிற னறிவுள திரண்டலா வான்மா" என்னும் சிவஞானபோதச் சூத்திரத்தானும், "சத்தசத் தறிவ தான்மாத் தான்சத்து மசத்து மன்று - நித்தனுய்ச் சதசத்தாகி நின்றிடு மிரண்டன் பாலும்" என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானுமறிக.

கருக. இதன்பொருள்:—கண் கோடி கோடிக்குச் சிற்றொளி இயற்கையில் இருந்தும் அவை அயற்பொருள்காண இரவியின் பேர் ஒளி ஆசிரித்தாங்கு - அளவிறந்த கண்களுக்கு அற்பவொளி இயல்பிலே வாய்க்கப்பெற்றும் அடுத்துள்ள பொருள்களைக் காண்பதற்குச்சூரியனுடைய மிக்கவொளியைத் துணைக்கொண்டடுத்தாற் போல, சிற்ற

இரவிமுன் சேட்டையற் றேயு மிருளஃ திலாப்பொருளன்
றிரவில் வருஞ்சென் றெனிற்பகல் வேறே திருந்தவிட
முரனொழி யும்மல முள்பொரு ளேனு முயிர்சிவத்தை
விரவிய போது கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௫௨

---

றிவு ஆன்மாவும் முற்றறிவு உற்ற சிவன் வியல் துணைகொண்டு உய்யல் பெறும் - கிஞ்சிஞ்ஞதையுடைய உயிரும் சர்வஞ்ஞதையுடைய சிவனது பெரிய துணையைப்பற்றி நின்று (விடயங்களை யறிந்து நுகர்ந்து) உய்திபெறும் என்றவாறு. உயல் - உய்யல்; இடைக்குறை. ஆன்மாத் தாமேயறியுமாற்றலின்றிச் சிவத்துணை கொண்டறிதலை "அறிந்திடு மான்மா வொன்றை யொன்றிஞ லறித லானு, மறிந்தவை மறத்த லானு மறிவிக்க வறித லானு, மறிந்திடுந் தன்னையுந்தா னறியாமை யானுந் தானே, யறிந்திடு மறிவ னன்று மறிவிக்க வறிவ னன்றே" என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானும் "எண்ணில்பல கோடி யுயி ரெத்தனையோ வத்தனைக்குங், கண்ணிற் கலந்தவருட் கண்ணே பராபரமே" என்னும் தாயுமானசுவாமி பாடலானும் அறிக

௧௫௨. இதன்பொருள்:—இருள் இரவி முன் சேட்டை அற்று ஏயும் - உலகத்திற் காணப்படும் பூதவிருளானது சூரியனுக்கு எதிரில் (காணுங்கண்கட்கு இல்லையாய்ச்) சத்திமாய்ந்திருக்கும், (அதனால்) அஃது இலாப்பொருள் அன்று-அவ்விருள் இல்பொருளாயொழியாது, சென்று இரவில் வரும் எனில் பகல் இருந்த இடம் வேறு ஏது - பகற்பொழுதெல்லாம் நில்லாதொழிந்து இராப்பொழுதில் வரும் என்றால் பகற்பொழுதெல்லாம் அது தங்கியிருந்தவிடம் வேறுயாது ? வேறு இல்லை, பகலினும் இரவிடமே இடமாகியும் பிரகாச மின்மையாற் சேட்டையற்றதாயிற்று, (அதுபோல) மலம் உள்பொருளேனும் உயிர் சிவத்தை விரவியபோது உரன் ஒழியும் - பாசமானது சத் தென்று கொள்ளப்படினும் ஆன்மாச்சிவத்தினைக்கலந்த காலத்துத்தன் சத்தியற்றுப் போகும் என்றவாறு. இரவியொடு கலந்தபொழுது எவ்வாறு கலந்தகண்ணிற்கு இருள்இல்லையோ அவ்வாறே பதியொடு விரவிய பொழுது அப்பசுவிற்குப் பாசம் இல்லையாம்; விரவாப்பசுக் கண்கூட்டு மலம் உண்மையால் அது சத்தென்க்கூறப்படும்; மலம் உள்பொருளேனும் உரனொழியு மென்பதனை "தெரிவரிய மெய்ஞ் ஞானஞ் சேர்ந்தவாறே சிவம்பிரகாசிக்குமிங்கே சீவன்முத்த ரானு,

உதித்தத் தமிக்கு மிரவியைப் போலன் றுயர்சிவமாம்
பதிப்பொருள் போக்கு வரவற்ற தாம்பசு பாசமறப்
பதித்திடுங் காந்தத் திரும்பென வாகத்தன் பான்மரிப்பு
விதிப்பி லுயிரைக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௫௫

---

முரியமல மௌடதத்தாற் றடிப்புண்ட விடமு மொள்ளெரியி னொளி முன்ன ரிருளுந் தேற்றின், வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும்போலாகி மாயாதே தன்சத்தி மாய்ந்து காயந், திரியுமள வும்முளதாய்ப் பின்புகாயஞ் சேராத வகைதானுந் தேயு மன்றே'' எனவும் ''நல்லசிவ முத்தியின்கட் பெத்தான் மாவை நணுகிநிற்கு மாதலா னுசமுமின் றுமே'' எனவும் வருஞ்சிவஞானசித்தித் திருவிருத்தங்களானும் ''முத்தி தனின் மூன்று முதலு மொழியக்கேள், சுத்தவநு போகத்தைத துய்த் தலணு - மெத்தவே, யின்பங் கொடுத்தலிறை யித்தைவிளை வித்தன் மல, மன்புடனே கண்டுகொளப் பா'' என்னும் உண்மைவிளக்க வெண்பாவானும் அறிக.

௧௫௫. இதன்பொருள்:—உயர் சிவம் ஆம் பதிப்பொருள் - சர்வவியாபக மங்களமயமாகிய பதியெனப்படும்வத்துவானது, உதித்து அத்தமிக்கும் இரவியைப்போலன்று - உதயாத்தமனத்தோடுங் கூடியுள்ள சூரியனைப்போல்வதன்று, (பின்னென்னெனில்) போக்கு வரவு அற்றது ஆம் - தோற்றக்கேடுகளில்லாத சுவயம்பிரகாசமாம், (அன்றியும்)விதிப்பு மரிப்பு இல் உயிரை காந்தத்து இரும்புஎன ஆகத்தன் பால் பசுபாசம் அற பதித்திடும் - பிறப்பிறப்பிற் புகுமாறில்லாத பக்குவசீவர்களைக் காந்தத்தின்முற்பட்ட இரும்பைப் போலாம்படி தன்னிடத்துப் பசுத்துவமும் பாசமும்நீங்கும்படி அத்துவிதக்கலவியினழுத்தும் என்றவாறு. பதிப்பொருள் போக்குவரவற்றதென்பதை ''ஹ்ருதாகாசேசிதாதித்யே ஸதாபாஸதி பாஸதி, நாஸ்தமேதி நசோதேதி'' எனமைத்ரேயோப்நிஷத்து இரண்டாவது அத்தியாயத்திற் கூறுமாற்றானும், ''போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே'' என்னும் திருவாசகத்தானும், ''பொத்துதே சொளிய தாகிப் போக்கொடு வரவில் லாநஞ், சத்தியே கவுரி பாங்கர் விநாயக ரென்னச் சார்ந்து'' எனவரும்விநாயகபுராணச்செய்யுளானும், ''நீக்கப் பிரியா நினைக்கமறக் கக்கூடாப், போக்குவரவற்ற பொருளணைவதென்நாளோ'' என்னும்தாயுமானசுவாமி பாடலானும், பசுபாசமறுக்கும் என்பதை, பசுபாசமறுத்தருளி'', என்

[பதி.]

பதிபசு பாசமென் மூன்றுட்சர் வஞ்ஞதை பண்டுற்றதோர்
பதிபின் னிரண்டுந்த னுள்ளுற மேற்படர்ந் தாருயிரிற்
பதிமல நீங்கிடப் பந்தமும் வீடும் பயப்பது நூல்
விதியி துணர்த்து கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௬௪

---

னும் திருவாசகத்தானும் "பதிபசு பாசத்தைப் பற்றற நீக்கும், பதிபசு பாசம் பயிலகிலாவே" எனவரும் திருமந்திரத்தானும், "கேடில்பசு பாசமெலாங் கீழ்ப்படவுந் தானேமே, லாடுஞ் சுகப்பொருளுக் கன்புறுவ தென்னாளோ" என்னும் தாயுமானசுவாமி பாடலானும், காந்தத்திரும்பெனப் பதிக்குமென்பதை "இரும்பைக்காந் தம்வலித்தாற் போலியைந் தங் குயிரை யெரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தா னாக்கி" எனவரும் சிவஞானசித்தித்திருவிருத்தத்தானும் அறிக.

௬௪. இதன்பொருள்:— பதி பசு பாசம் என் மூன்றுள் ஓர்பதி - பதி பசு பாசமென்று சொல்லப்படுகின்ற முப்பொருள்களுள் (முற்கூறிய) ஒப்பற்ற பதிப்பொருளானது, சர்வஞ்ஞதை பண்டு உற்றது - முற்றறிவை அநாதியே அமைந்துள்ளது, (அல்லாமலும்) பின் இரண்டும் தன் உள் உற மேற்படர்ந்து - பிற்கூறிய பசுபாசமென்னு மிரண்டு பொருள்களும் தனக்குள் வியாப்பியமாயடங்கத் (தான்) வியாபகமுற்று, ஆர் உயிரில் பதிமலம் நீங்கிட பந்தமும் வீடும் பயப்பது - அரிய பசுவின்கண் அநாதியே பதிந்துள்ள ஆணவமலம் நீங்கும்படி பந்தத்தையும் மோக்கத்தையும் கொடுப்பதாகும், நூல் விதி இது உணர்த்து - சாஸ்திர சம்மதம் ஆகிய இதனை நன்கு விளக்குவாயாக என்றவாறு. மூன்றுமடி எடுப்பிலுள்ள பதி - வினைத்தொகை. "பதிபசு பாச மென்னப் படும்பொருண் மூன்ற வற்றுட், பதியிரு பொருளின் மேலாய்ப் படர்ந்தபே ரறிவா யாவி, பதிமல மூல நீங்கப் பந்தமும் வீடு நல்கும், பதியிது யாதென் றெண்ணல் படர்ந்துனக் கருளு நாமே" என்னும் விநாயகபுராணச்செய்யுள் இங்கே சிந்திக்கற்பாலது. "பந்தமும் வீடும் படைப்போன் காண்க" என்னுந் திருவாசகமும் நோக்குக. நீங்கிட என்பது காரியகாரணப் பொருளில் வந்தது.

[பசு]

எண்ணில வாகியென் றும்முள வாகி யிருளினன்றே
நண்ணிய வாகிநின் னாலுடல் பெற்றெதை நண்ணினுமக்
கண்ண து வாய்க்கன்மஞ் செய்தறத் தானிற் கலப்பபசு
வெண்ணில வேய்ந்த கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

[பாசம்]

பதியறி விக்க வறியும் பசுவினைப் பற்றலல்லாற்
பதியினைச் சாரும் பலமில தாகிப் பசுவினின்றும்
பதியரு ளாற்பினர் நீக்கப் படுவது பாசமதாம்
விதியரி போற்றுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௫௬

---

௧௫௫. இதன்பொருள்:—பசு - பசுக்கள், எண் இல ஆகி என்றும் உள ஆகி இருளின் அன்றே நண்ணிய ஆகி - அளவில்லாதனவாகிப் பெத்தமுத்தி யென்னும் இருதசையினுமுள்ளனவாகி ஆணவ மலத்தில் அநாதியே பொருந்தியனவாகி, நின்னால் உடல் பெற்று - உன்னாலே தூலசூக்கும உடல்களைத்தரப்பெற்று, எதை நண்ணினும் அக்கண் அது ஆய் - பதிபாசம் என்னுமிரண்டுள் எதனைப் பொருந்தி நிற்பினும் அவ்விடத்தே அதுமயமாகி, கன்மம் செய்து - புண்ணிய பாவங்களைச் செய்து, அறத்தால் - சிவபுண்ணியத்தால், நிற்கலப்ப - உன்னை அத்துவிதமாக விரவிநிற்பனவாம் என்றவாறு. நில - நிலா; அது இங்கே "குறியதன் கீழாக் குறுகலும்" என்னும் நன்னூற் சூத்திரவிதிபற்றிக் குறுகிற்று. வேய்தல் - தரித்தல். "எண்ணரி தாகியென் றுமுள்ளதா யிருளி னன்றே, நண்ணிய தாகி நம்மா னலத்தகு தேகத் தெய்திக், கண்ணது வதுவாய்ச் சார்ந்து கருமங்க ளாற்றி மேலாம், புண்ணிய வலியா னம்மைப் புணர்வது பசுவென் றோர்தி" என்னும் விநாயகபுராணச் செய்யுள் இங்கே சிந்திக்கற்பாலது.

௧௫௬. இதன்பொருள் :— பதி அறிவிக்க அறியும் பசுவினை பற்றல் அல்லால் பதியினைச் சாரும் பலம் இலது ஆகி - பதிப்பொருளானது சூக்கும அறிவாய் உண்ணின்று அறிவுறுத்த விடயங்களை அறிகின்ற பசுப்பொருளைப் பிடித்து நிற்றலையல்லாமல் அப்பதியைச்சாரத்

யோக மெனுஞ்சொற் பொருள்சேர்க்கை யாமுயி ருஞ்சிவமு
மேக மெனிற்கூடல் வேண்டுவ தில்லை யிருபொருளாய்
யோகில் விளங்கினு மந்தத்தி லாமிரண் டொன்றறல்வி
வேக ருணர்வர் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கருஎ

---

தக்க ஆற்றலில்லாததாகி, பதி அருளால் பின்னர் பசுவினின்றும் நீக்கப்படுவது பாசமதாம் - பதி தன்னுடைய திருவருளால் பக்குவ முற்றபின்பு விலக்கப்படுவதாயுள்ளது பாசமாம் என்றவாறு. பாசம தாம் என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. விதி அரி - பிரமாவிட் டுணு. "அறிவித்தா லறியு மாவி யதினன்றிப் பதியிற் சாராச், செறி வுற்றஞ் ஞான மென்றுந் தெரிக்குமா ணவத்தி னோடு, குறிபெற்ற மாயை கன்மங் கூடிமூன் றாகி நின்று, நெறியுற்றெம் மருளா னீக் கப் படுவது நீண்ட பாசம்" என்னும் விநாயகபுராணச் செய்யுள் இங்கே சிந்திக்கற்பாலது.

கருஎ. இதன்பொருள்:—யோகம் என்னும் சொற்பொருள் சேர்க்கை ஆம் - யோகமென்கின்ற சொல்லினது பொருளாவது சேர்தலென்பதாம், உயிரும் சிவமும் ஏகம் என்னில் கூடல்வேண்டுவது இல்லை - (ஏகான்மவாதிகள் கருத்தின்படி) சீவனும் சிவனும் ஒருபொரு ளாயிற் கூடுதல் அநாவசியமாம், இரு பொருளாய் யோகில் விளங்கி னும் அந்தத்தில் இரண்டொன்றறல் ஆம் - (அவைகள்) இரண்டு பொருளாக யோகாரம்பத்திற் காணப்படினும் அதன் முடிவில் துவித வாதத்தையும் ஏகான்மவாதத்தையுங் கடந்த சுத்தாத்துவிதத்தைப் பொருந்தா நிற்கும், விவேகர் உணர்வர் - இவ்வுண்மையை ஞானிகள் அறிவர்கள் என்றவாறு. யோகாந்தத்தில் அத்துவிதமுறுதலை "ஒன்றே யான பொருளின்கண் யோக மென்னுங் கருத்தில்லை, யொன்றே டொன்று சேர்ந்துழியே யோக மென்னுங் கருத்துளதா, மொன்றே டொன்று சேர்ந்தவற்றி னொழிந்து நில்லா தவையாகா, தொன்றா நின்ற சம்பந்தம் யோக மென்ப ருணர்ந்தோரே" என்னும் விநாயக புராணச் செய்யுளானுணர்க.

[சைவசித்தாந்தமே தக்ஷிணாமூர்த்தியின் கைம்மலர்ச் சிந்முத்திரைப் பொருளெனல்.]

தென்முகத் தெய்வத்தை யேகான்ம வாதிகள் சேவைசெய்வர்
சிந்முத் திரைப்பொரு டோரா ரிருவிரல் சேர்ந்திரண்டி
றன்மைத் தகைதயவ ரொன்றெறன்ப தென்னுரை தாண்டுமுடி
வின்மெய்ப் பொருடான் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

[சைவசித்தாந்தமே அத்துவிதமென்னும் பெயரைத் தாங்கற்குரியதெனல்.]

அத்து விதச்சொற் பொருளிரண் டற்றதென் றுகுமிப்போர்
வத்துவொன் றேயெனு மேகான்ம வாத மதங்கொளக்கிஞ்
சித்துந் தகாதொன்றி யொன்றாமை சைவசித் தாந்தமுணர்
வித்து வகிக்குங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கருசூ

கருஅ. தென்முகத் தெய்வம் - தக்ஷிணாமூர்த்தி, சேவை - வணக்கம், சிந்முத்திரை - (மத்திமை அநாமிகை கநிஷ்டை என்னும் மூன்று விரல்களை யொதுக்கி அங்குஷ்டை என்னும் விரலோடு தர்ச்சநி என்னும் விரல் பொருந்தக் கூட்டியுள்ள) ஞாநமுத்திரை, உரைதாண்டல்- வாசாமகோசரமாதல். அவ்வாறாதலே மோக்ஷலக்ஷணமென்பதை "சித்திரம் வடதரோர் மூலே விர்த்தா சிஷ்யா குருர்யுவா, குரோஸ்து மௌநம் வியாக்யாநம் சிஷ்யாஸ்து ச்சிந்ந ஸம்சயா:" என்னும் தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரச் சுலோகத்தானும் "நானற்ற போதத்தே நாஞன முத்தியை, நானெங்ங னஞ்சொல்வ துந்தீபற, நான்மறைக் கெட்டாதென் றுந்தீபற" என்னும் அவிரோத வுந்தியாரானும், "முகத்துக்கண் கொண்டு பார்க்கின்ற மூடர்கா, ளகத்துக்கண் கொண்டு பார்ப்பதே யானந்த, மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய, சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே" என்னுந் திருமந்திரத்தானும் "மோன மென்பது ஞான வரம்பு" என்னும் ஔவைப்பிராட்டி திருவாக்கானும் "கல்லாலினீழறனி லொருநால்வர்க்குங் கடவுணீ யுணர்த்துவதுங் கைக்காட் டென்றாற், சொல்லாலே சொலப்படுமோ சொல்லுந் தன்மை தரும்புபற்றிக் கடல்கடக்குந் துணிபே யன்றோ" என்னும் தாயுமானசுவாமி பாடலானுமறிக.

கருகூ. கிஞ்சித்து - அற்பம். வகித்தல் - தாங்குதல்.

ஆநந்த வெள்ளத் தழுந்துமொ ராருயி ரீருருக்கொண்
டாநந்த வெள்ளத் திடைதிளைத் தாலொக்கு மவ்வின்பென
ஞாநந்த வாச்சைவ சித்தாந்த நீர்மை நவின்றதுந
வீநந்த ழாநூல் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௬௦

அவாதந் திரமர பாலுனை மேவ வணைவதற்கோ
சுவாதந் திரிய மெனக்கிலை தூயை யசுத்தனியான்
பவாதஞ்ச மென்னு மெனைக்கொண் டுனைத்தந்து பல்சமய
விவாத மொழித்தி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௬௧

கற்பினுங் கேட்பினும் பற்பல சாத்திரங் கற்றபடி
நிற்ப தரிதகம் பாவித் தவர்க்கு நினைமுனுய்த்துப்
பிற்புகு வார்க்கு வசமா மபரார் பெருமைகடல்
வெற்பிற் பெரிது கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௬௨

---

௧௬௦. ஆநந்த வெள்ளம் என்பது முதல், ஒக்கு மென்பது வரையும் திருக்கோவையார். நவீநம் தழா நூல் - நூதநத்தைமேவாத திருக்கோவை என்னும் நூல்; புராதந நூல் என்றபடி.

௧௬௧. எனக்கு தந்திரமரபாலுனை மேவ அவா - அடியேனுக்குச் சிவாகம மார்க்காநுசாரக்கிரமத்தா லுன்னையடைதற்கு விருப்பம். சுவாதந்திரியம் - தன்னிஷ்டப்படி செய்யுந்தன்மை. பவா - பவனென்னும் நாமமுடையவனே. தஞ்சம் அடைக்கலம். எனைக்கொண்டு உனைத் தந்து என்றது உயிரைச்சிவம் வியாப்பியமாக்குமுகத்தான் ஏற்றுச் சிவத்துவத்தை உயிர்க்குத் தருதலை; இனி, கொண்டென்பதற்கு அடிமை கொண்டு என்றலுமாம். இதனை "தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச் சங்கரா வார்கொலோ சதுரர்" எனவருந் திருவாசகத்தானும் "ஓர்மாத் திரையளவென், பேரிற் குறுகினேன் பின்" எனவருங் குமரகுருபரசுவாமிகள் திருவாக்கானுமறிக. விவாதம்-கலகம்.

௧௬௨. அகம்பாவம் - நானென்னும் அகந்தை. நிற்பது, அகம் பாவித்தவர்க்கு அரிதாம் எனவும், பிற்புகுவார்க்கு வசமாம் எனவும் ஆம், என்பதனை இரண்டிடத்தும் கூட்டுக. அபரார் - உன்னை முன் னிறுத்திப் பின்னின்றவர் என்க; மேற்கூறிய இருவருட் பின்னவர் எனினுமமையும். பின்னிற்றலினுயர்வை "முன்னின் றாண்டா யெனை

அண்ட வியாபக னீயென் னுடனுறைந் தாய்மலக்கட்
டுண்ட வியாபக னென்றிக ழாதவ் வுதவிமறந்
துண்டு துயின்றுதற் போதமுற் றேனெனை யோம்படைசெய்
வெண்டிரு நீற்றுக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௯௩

உசாவென் மநாதிக் கொளித்தி பெறவே றுபாயமிலே
னசாவின னண்மைக் குரியை யபாத்திய னல்லைகண்டாய்
சசாதிக னுனூல் சிவமுயிர் சித்தெனச் சாற்றுதலால்
விசாதிக னல்லேன் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

முன்னம் யானு மதுவே முயல்வுற்றுப், பின்னின் றேவல் செய்கின் றேன் பிற்பட் டொழிந்தேன் பெம்மானே" என்னுந் திருவாசகத் தானும் "முக்கணிறை தருகரியை முன்னடத்திப் பின்னதன்றுட், பக்கமறைந் தேகுநர் * * * * பூரணவூர்ப் புக்கிணையில் பராநந்தப் பூவையையு மேவுவரால்" என்னும் வைராக்கியசதகச் செய்யுளானு மறிக.

௧௯௩. அண்ட வியாபகன் நீ மலக்கட்டுண்டு அவ்வியாபகன் என்று இகழாது என் உடன் உறைந்தாய் - சர்வலோக வியாபகனாகிய நீ (என்னை) மலபந்தப்படலால் (இப்பெத்ததசையில்) வியாபகமற்ற நிலையினனென்று விலக்காதபடிக்கு என்னொடுங்கூட வொற்றித்து நின்றனை என்க; அண்டம் - உலகம். கட்டுண்டு என்பது கட்டுண்ணுத லாலென எதுப்பொருளில் விரிந்த எச்சம்; அது அவ்வியாபகன் என்னுங் குறிப்புமுற்றுக்கொண்டு முடிந்தது; அவ்வியாபகன் என்பதில் அகரம் அன்மைப் பொருளில் வந்தது; ஆன்மா இயற்கையில் வியாபகன் என்பதனை "எங்குமாய் முத்தியி லீசனோ டெய்தலான், மங்கா வுயிர்விபு வுந்தீபற, மற்றைய கூறெனு துந்தீபற" என்னும் அவிரோதவுந்தியார்ச் செய்யுளானும் "வியாபக நினக்குள தியாமுமஃ துளமே" எனவரும் குமரகுருபர சுவாமிகள் திருவாக்கானும் அறிக. ஓம்படை செய்தல்-பாதுகாத்தல். இதனை 'உனையடையு மவர்தம்பா லோம்படைசெய்" எனவருஞ் சேதுபுராணச்செய்யுளானறிக.

௧௯௪. உசாவுதல் - ஆராய்தல். மநாதி - மந வாக்குக் காயங்கள். அசாவுதல் - தளர்ச்சியடைதல். அண்மை - அணித்தாந்தன்மை. அபாத்தியன் உரிமையற்றவன். சசாதிகன் - ஒத்தவருணத்தவன். நூல் சிவம் உயிர் சித்தெனச் சாற்றுதலால் - சாத்திரம் சிவமும் உயி

தாயின் மடியது சேயெனிற் காரியத் தாட்சியுண்டோ
மேயுன் னருணின் வியாபகத் தூடு வியாப்பியனு
ஞயி னபரிமி தாநந்த போக மநுபவிப்பேன்
வீயுந் துயரங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கசுரு

சேட்டிதன் யாவினு நீயென மாமறை செப்பியவுள்
ளீட்டினை யோரி னெனக்குச் சுதந்திர மேதசத்தை
வேட்டெழும் போதி னுடன்பா டகன்று விழைதியுயிர்
வீட்டை யவாவக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கசுசு

கரையாக் கிரமித் திலது கடலுங் கதிர்மதிகோ
ணிரையாக் கணமு நிலாது சரித்த நிலமுதலா
வுரையாக் கிடந்த வுலகந் தரத்தி னுறுமிவைநின்
விரையாக் கலிகாண் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

ரும் ஆகிய இரண்டும் சித்துப்பொருளாகிய ஒரு சாதியெனக்கூறுத லான் என்க. விசாதிகன் - வேறு வருணத்தவன்; ஸஜாதிகன், விஜாதிகன் என்பன வடமொழிகள். சிவமும் உயிரும் சசாதிகமுடையன வென்பதனை "அப்பொருளு மான்மாவு மாரணநூல் சொற்றபடி, தப்பில்லாச் சித்தொன்ருஞ் சாதியினுற்—செப்புமுறை, தேரிற் றுவிதஞ் சிவாகமநூல் சொன்ன நிட்டை, யாருமிடத் தத்துவித மாம்" என்னும் ஆன்ருேர்வாக்கானறிக.

கசுரு. நான் உன் அருள் மேய் நின் வியாபகத்தூடு வியாப்பியன் ஆயின் அபரிமிதாநந்த போகம் அநுபவிப்பேன் எனக்கூட்டுக; அபரிமிதம் - அளவிறந்தது; பரிமிதம் - அளவு; இதுவடமொழி.

கசுசு. யாவினும் சேட்டிதன் - எல்லாப்பொருள்களினும் உள்ளிருந்தியக்குவோன். இதனை "சித்துட னசித்துக் கெல்லாஞ் சேட்டித னுத லானும்" எனவருஞ் சிவஞான சித்தித்திருவிருத்தத்தானுணர்க. உள்ளீடு - அந்தரங்கம். அசத்து என்றது நிலையற்ற பிரபஞ்சத்தை. சீவர்கள் சுதந்திரஹீன ரென்பதனை "பல்சித்தி முத்தி பரனு லடைதலாற், றெல்சீவ ரும்முள ருந்தீபற, சுதந்திர ஹீனரென் றுந்தீபற" என்னும் அவிரோதவுந்தியார்ச் செய்யுளானுணர்க.

கசுஎ. கரை ஆக்கிரமித்தல் - கரைகடந்து செல்லுதல். நிரை ஆக - ஒழுங்காக; ஆக என்னும் வினையெச்சத்தீறு தொக்கது. அந்த

எத்திஞற் காண்ப னறிவிற் சிறிய னிகபரநீ
முத்திநீ யண்ட மநேகமும் மூர்த்தி முழுமுதனீ
சத்தி சிவநீ விநாயக னீபல் சராசரநீ
வித்துநீ யாவை கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

புண்ணிய மிக்கார் திடகாத் திரத்தைப் பொருந்தியுனை
நண்ணுபு சீர்த்தனர் நானடு மேவி னகைக்கிடமா
மெண்ணிய வெண்ண மறிந்துளே தாழ்க்கலே யீதியைய
வெண்ணிற வாச கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௬௯

இருதினை மூவிட மைம்பாற் பிரேரித் திருப்பவனீ
கருதினை யேற்சாத் தியமா மசாத்திய காரியமுந்
தருதின மென்றென திச்சையை யீயத் தயாநிதிநீ
விருதினை வேய்தி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௭௦

மூளா வனலென வுள்ளே கனன்று முகந்தளர்ந்துற்
காளா யிருக்கு மடியவர் தங்களல் லன்மொழிந்தால்
வாளாங் கிருத்தி யிதுமுறை யோசொல் வழிவழியாம்
மீளா வடிமை கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௭௧

---

ரம் - ஆகாயம். விரையாக்கலி - சிவாக்ஞை; இது பதினோராந்திருமுறை, பெரியபுராணம், தணிகைப்புராண முதலியவற்றின் ஆன்றோர்களா னெடுத்தாளப்பட்ட சைவ பரிபாஷை.

௧௬௮. எதனுல் - என்பது எத்திஞல் என்ருயிற்று; "எத்திஞற் பத்தி செய்வேன்" எனத் தேவாரத்தில் வருதலுமது. வித்து - மூலம்.

௧௬௯. திடகாத்திரம் - திடசரீரம். வாசம் - வஸ்திரம்.

௧௭௦. பிரேரித்தல் - நடத்துதல். சாத்தியம்—நிறைவேற்றத்தக்கது. அசாத்தியம் - நிறைவேற்றத்தகாதது. விருது - வெற்றியைக் குறித்த அடையாளம். வேய்தல் - சூடுதல்.

௧௭௧. மூளா அனல் - வெளிப்படச்சுவாலிக்காத அக்கினி. அல்லல் - துன்பம். வாளாங்கிருத்தல் - சும்மாவிருத்தல். யாம் வழி வழி மீளாஅடிமை - குறையிரந்து நின்ற யாங்கள் பரம்பரையிற் றிறம்பாத அடிமை என்க. இச்செய்யுள் "மீளா வடிமை யுமக்கே யாளாய்ப்

[பரமரஹஸியம்.]

அருவுரு வத்தில் வருமுரு வத்தி லடியவர்க்குத்
திருவருள் செய்யமுன் வந்ததன் றேதேவ ரீருருவ
மிருவரு மூவரு மென்னை யலைத்தன ரென்னுகொலோ
வெருவரா தீர்த்தல் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

தத்துவா தீத னெனினுநின் றுய்பல தத்துவத்து
முய்த்தவென் விண்ணப்ப முன்செவிக் கேறு மொழிவதில்லை
சித்த சலனம் பிணியா லடைந்தனன் றீர்த்தல்பரம்
மித்திர னிற்குக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கஎ௩

---

பிறரை வேண்டாதே, மூளாத் தீப்போ லுள்ளே கனன்று முகத்தான் மிகவாடி, யாளா யிருக்கு மடியார் தங்க ளல்லல் சொன்னக்கால், வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே" என்னுந் தேவா ரக்கருத்து வைத்தோதப்பெற்றது.

கஎ௨. இருவரு மூவரும் - என்றது இங்கே ஐம்புலன்களை; அவை களானுயி ரலைப்புண்ணுதலை "அரிச்சி ராப்பக லைவரா லாட்டுண்டு" என வரும் தேவாரத்தானும் "துன்னியவைம் புலவேடர் சுழலிற் பட்டுத் துணைவனையு மறியாது துயருறுந்தொல் லுயிரை" எனவரும் சிவ ஞான சித்தித்திருவிருத்தத்தானும் அறிக. இச்செய்யுள் விநாயகப் பெருமானுடைய திருவுருவமகிமையைத் தன்னுட் பொதிந்திருத்த லாற் பரமரஹஸியமெனத் தலைப்பெயரிடப் பெற்றது; இந்த ரஹஸிய தரிசநம், பன்னூற் பயிற்சிமட்டோ டமைவதன்று; உபாசனைமிகுதி யாற் றிருவருள் காட்டக்காண்பது; விநாயக சகஸ்ரநாமத்துளொன்று கிய "த்வைமாத்ரேநமஃ" என்பதன் பொருளுணர்ந்தார்க்கு ஒருவாறு தூலமாய் விளங்கும்.

கஎ௩. தீர்த்தல் பரம் நிற்கு மித்திரன் என்க; மித்திரன் இங்கே அன்பன்; மித்திரனுக்கு அப்பிணியைத் தீர்த்தருளுதல் உனக்கே பர மாகு மென்பதாம். கடவுள் தத்துவாதீதனென்பதை "சிவேசாந தத் பூரு ஷாகோர வாமாதிபிர் பிர்மபிர் ஹ்ருந்முகைஷ் ஷட்பிரங்கைஃ, அநௌபம்ய ஷட்த்ரிம்சதம் தத்வ வித்யா மதீதம் பரந்துவாங் கதம் வேத்தி கோவா" எனவரும் சிவபுஜங்க சுலோகத்தானும், "இருநான்கு மூந்நான்கு மீரெட்டுங் கடந்தா, னுருநான்கு மருநான்கு முபய

இல்லிக் குடத்தினை நீர்மொளப் பேதைபெற் றேகுதல்போ
லல்லற் பிணிதுளை யாக்கைபெற் றுச்சரி யாதியிலே
செல்லத் தொடங்கினன் கைவந் திலபிணி தீர்த்திமலை
வில்லிக்கு மைந்த கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கஎச

கருவி யிழிவுறின் முற்றுப்பெ றாசெயுங் காரியங்க
ளொருவி டயத்துஞ் செலாது மனம்பிணி யுற்றவுடன்
மருவி னவர்க்கவைக் காகூழி லார்கதி வாய்ப்பதெங்கே
வெருவினன் காத்தி கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

பாசனங் கூடி யழவு மயலவர் பற்பலவாய்ப்
பேசவு மென்னுயிர் போகா வகையுண்மை பேசியவா
வாசக மூர்த்திவித் தாவா கனித்தருச் சித்தனனி
வேசநஞ் செய்து கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கஎசு

---

மொன் றுமமைந்தான்" எனவரும் நாகைப்புராணச் செய்யுளானும், அதீதனாயிருந்துந் தத்துவங்களுட் கலந்துநின்றா னென்பதை "தத்துவங்க ளேசத்த தாதுவாய்" எனவருங் கந்தர்கலிவெண்பாவானும், "மண்ணி னோரைங் குணமாகி வதிவா னெவனீ ரிடைநான்காய், நண்ணி யமர்வா னெவன்றீயின் மூன்றாய் நவில்வா னெவன்வளியி, னெண்ணு மிரண்டு குணமாகி யியைவா னெவன்வா னிடையொன்றாய், மண்ணா லெவனக் கணபதியை யன்பிற் சரண மடைகின்றாம்" என்னும் விநாயகபுராணச் செய்யுளானும், "மண்ணிடையைந் தாயமர்ந் தா னீரிடைநான் காய்வதிந்தான், கண்ணிடைதீ யிடைமூன்றாய்க் காலிடைமற் றோரிரண்டாய், விண்ணிடையொன் றாயமர்ந்தா னொலும் விளம்பியவை, யெண்ணிடைவ தல்லாம லின்னனென வுணர் வனவோ" என்னும் நாகைப்புராணச் செய்யுளானும், "வெளிமுதற் பூதங்க ளாகி விரிந்தவம்மே" எனவரும் அபிராமியந்தாதிச் செய்யுளானும் அறிக.

கஎச. இல்லிக்குடம் - ஓட்டைக்குடம். பிணிதுளை யாக்கை - பிணியாற்போழப்படுகின்ற யாக்கை என்க. கைவருதல் - சித்தித்தல்.

கஎரு. கருவி - துணைக்காரணம். காரியங்கள் முற்றுப்பெறா எனவும், மருவினவர்க்கு மனம்செல்லாது எனவும் கூட்டுக.

கஎசு. பாசனம் - சுற்றம். அயலவர் - பிறர். உண்மை பேசியவா - உண்மைப்பொருளை உபதேசிக்கவந்தருள் என்க; பேசிய - செய்யிய

இந்த வுடலழி தன்மா லையதென் றியம்பியநூற்
சிந்தை யுணர்ந்தும் மலவலி யானிற் றியானநிலை
வந்தில துன்னரு ளுய்த்தால் வருநின் வலிக்குமல
வெந்திறல் வற்றோ கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

உடம்பினுக் கொப்புர வேசெய்து கால மொழிந்ததும்பர்க்
கிடந்துண்ணப் பண்ணக் கிடைத்தில தென்ற கிலேசமுள்ளத்
திடந்துன் னியதுற் றதுவார்த் திகமுய்வை யீதியங்க
விடம்பநந் தீர்த்துக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

என்னும் வாய்பாட்டு வினையெச்சம். ஆசநம் மூர்த்தி நிவேசநம் செய்து வித்து ஆவாகனித்து அருச்சித்தனன் - சடுத்தாசனத்தின் மீது மூர்த்தியைச் சேர்த்து மூலமந்திரத்தாலழைத்துத் தாபித்து உனையடியேன் பூசித்தேன் என்க; வித்து - மூலம்; அதனை இங்கே மூலமந்திரமெனக்கொள்க. நிவேசநம் - சேர்த்தல். ஆவாகநம் - மூர்த்தியில் மூர்த்திமானையழைத்தல். "கூகா வெனவென் கிளைகூடியழப், போகா வகைமெய்ப் பொருள்பேசியவா" என்னுங் கந்தரநுபூதிச் செய்யுளும், அரிச்சுற் றவினை யாலடர்ப் புண்டுநீ, ரெரிச்சுற் றக்கிடந் தாரென் றயலவர், சிரிச்சுற் றுப்பல பேசப்ப டாமுனந், திருச்சிற் றம்பலஞ் சென்றடைந் துய்மினே" என்னுந் தேவாரமும் இங்கே சிந்திக்கற்பாலன.

௧௭௭. மல வெம் திறல் நின் வலிக்கு வற்றோ - மலத்தினது கொடியவலி உன் வலியினும் பார்க்க அதிகவல்பைமுடைத்தோ? இல்லை என்க; ஓகாரம் எதிர்மறைப்பொருட்கண்வந்தது.

௧௭௮. ஒப்புரவு என்றது, இங்கே உண்பதும் உறங்குவதுமாகிய சாமானிய உலகநடையை; உம்பர் கிடந்துண்ணப்பண்ணுதல்-வீட்டுலகத்திருந்து நித்தியாநந்த மநுபவித்தற்கேதுவாய சிவபுண்ணியங்களைச் செய்தல்; "உடம்பிற்கே யொப்புரவு செய்தொழுகா தும்பர்க், கிடந்துண்ணப் பண்ணப் படும்" என்னும் நாலடியார்ச் செய்யுள் இங்கே சிந்திக்கற்பாலது. கிலேசம் - கவலை. வார்த்திகம் - விருத்தாப்பிய அங்கவிடம்பநம் - சரீரோபத்திரவம்; இது வடமொழி.

ஒருகன்ன லேனு முனைநினை யேற்கு முதவுவையோ
குருகண் ணுதனுந்தை தந்தனன் கூற்றங் குதிக்குமுயர்
விருகண் டுளிப்பச் சிவார்ச்சனை மாறு தியற்றுமந்த
மிருகண்டு சேய்க்குக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே,

சாட்டையிற் பம்பரம் போலரு ளாலிச் சகமுழுது
மாட்டு முனக்கெனைப் பக்குவ னுக்க லரிதன்றுகா
னீட்டித் திடாதெனக் காறாறு நீத்து நிலாவுநிச
வீட்டைத் தருதி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கஅ0

---

கஎகூ. கன்னல் - நாழிகை. குரு கண்ணுதல் நுந்தை - சர்வ லோக குருவாகிய நெற்றிக்கண்ணையுடைய உனது பிதா. கூற்றம் குதித்தல் - இயமனுக்குத் தப்பிப் பிழைத்தல். மிருகண்டு சேய் - மார்க்கண்டேய முனிவர். நுந்தையானவன் உயர்வைச் சேய்க்குத் தந்தனன், அவ்வாறு நீயும் அதனை அடியேனுக்குத் தந்தருளுவையோ! என்க; சொல் என்பது சொல்லெச்சம்.

கஅ0. சாட்டையிற் பம்பரம்போலுமாறு திருவருளாற் சகத்தினை யாட்டுந் தன்மையை, "சாட்டையிற் பம்பர சாலம் போலெலா, மாட்டுவா னொருவனென் றறிந்து நெஞ்சமே, தேட்டமொன் றற வருட் செயலி னிற்றியேல், வீட்டறந் துறவற மிரண்டு மேன்மையே" என்னும் தாயுமானசுவாமி பாடலானறிக. கால் நீட்டித்திடாது - காலம் நீளாதபடி; கால் - காலம்; இதனை "காலே வலிமையுங் காற் றுங் கூற்றுந், தாளும் பொழுதுந் தறியும் வழியு, மளவையுந் தேரி னுருளு மாகும்" என்னும் பிங்கலந்தைச் சூத்திரத்தானறிக. நிசம் - உண்மை. ஆறாறு - முப்பத்தாறு தத்துவங்கள்; சைவசித்தாந்த உண்மைவீடு அவைகளைக் கடந்து விளங்குமாற்றை, "ஆறா றையுநீத் ததன்மே னிலையைப், பேறா வடியேன் பெறுமா றுளதோ, எனவருங் கந்தரநுபூதிச் செய்யுளானறிக.

ஊக்க மனத்தி னுடம்பின் வலிபெற் றுழுவலன்புன்
றேக்க மலப்பொன் னடியிற் பெறுதவர் சேர்வதென்னே
யாக்க மொருங்கு பெறுதலின் வேறிலை யாரவருள்
வீக்க மளித்தி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கஅக

உன்ன துபாசனை நாளடை வாக வுயிரின்வினை
யென்ன விருப்பினு மோடு மிருந்த விடந்தெரியா
தன்னதென் னுன்மட்டு மாகாது வேண்டு மருட்டுணையு
மின்னெறி வேணிக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

மடங்கற் கொடியனென் வாழ்நாண் முடிவில் வரிற்புலனைந்
தடங்கக் கலங்கி யலமரு வேனந்த வேளையிலே
யுடங்குறை சித்தியும் புத்தியு நீயும்வந் துய்யக்கொள்வீர்
விடங்க சொரூப கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கஅரு

---

கஅக. ஊக்கம் - மனவெழுச்சி. உழுவலன்பு - விடாது தொடர்ந்த அன்பு. ஒருங்கு பெறுதலின் ஆக்கம் வேறு இல்லை - மேற்கூறிய மூன்றையும் ஒருசேர அடைதலைப்பார்க்கிலும் செல்வம் பிறிதொன்று கிடையாது என்க. ஆர - அம்மூன்றையும் ஒக்கவடையும்படி யென்க. அருள்வீக்கம் - திருவருட்பொலிவு.

கஅஉ. உபாசனை - வழிபாடு. வழிபாட்டிற்கும் அருட்டுணை வேண்டு மென்பதனை, 'அவனருளாலே யவன்றாள் வணங்கி,' என்னுந் திருவாசகத்தானும் "உன்றிரு வடிக்கீ ழுறுதியா மன்பு முன்றிரு வருளினாற் கிடைப்ப, தன்றிறல் பலவு மாய்ந்ததா லுரைசெய் யளப்பருந் திறமையான் மதியான், மன்றவே கிடைப்ப தன்று" என்னும் சிவதத்துவவிவேகச் செய்யுளானும் அறிக.

கஅரு. மடங்கற் கொடியன் - இயமனாகிய தீயவன்; இவ்வாறே பிறரும் "கூற்றுவன் கொடியனாகி" எனச் சிந்தாமணியுட் கூறினார். உடங்குறைதல் - ஒருங்குவீற்றிருத்தல் விடங்க சொரூபன் - சுவயம்பு மூர்த்தி. இச்செய்யுளில் "வவ்விய பாகத் திறைவரு நீயுமகிழ்ந் திருக்குஞ், செவ்வியு முங்க டிருமணக் கோலமுஞ் சிந்தையுள்ளே, யவ்வியந் தீர்த்தென்னை யாண்டபொற் பாதமு மாகிவந்து, வெவ்விய காலனென் மேல்வரும் போது வெளிநிற்கவே" என்னும் அபிராமியந் தாதிக் கருத்தமைதலைக் காண்க.

சேய்க்கமு தூட்டுஞ் செயன்மட்டு மன்றது சீரணியா
நோய்க்கு மருந்து நுகர்வித்துப் பத்திய நோற்பதுவுந்
தாய்க்குரித் தாகுங் கதிதர லோடதன் சாதகமு
மேற்கொடுத் தாள்வை கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

இழிதொழில் காலம் வருண முறைமை யிடந்தவறிப்
பழிபகை பாவமும் பாரா துஞற்றும் பரிசுடையே
னொழிதரு மாற்ற விலையடி யேனுக் கொழியவருள்
விழிதரல் வேண்டுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

சிகிச்சையை நோய்க்கு விதித்தன நூலவை செய்யவவை
மிகுத்த வவற்று ளலைபடு மேழையின் மீதிரங்கி
நகச்செயுங் குற்ற மெலாம்பொறுத் தாணமக் காரமுன்றெய்
விகச்செயற் கோலங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

பிறப்பினுக் கேதுமஞ் சேனின் னருளைப் பெறுவதெந்நா
ளிறப்பினுக் கென்கட வேனெனும் வாசகர்க் கேற்குமது
மறப்புலிக் கஞ்சில னுகநின் பத்தி வலியிலையே
விறப்பை யகற்று கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கஅள

---

கஅச. சேய் - குழந்தை. அமுது - பால்; உணவு எனினும் ஆம். சீரணியாமை - செரியாமை. பத்தியம் நோற்றல் - பத்திய மநுட்டித்தல். தாய் - மாதா. சாதகம் - சாத்தியமடைதற் கேதுவாய உபாயங்கள்.

கஅரு. இழிதொழிலை உஞற்றும் பரிசுடையேன் என்க. அருள் விழி - கிருபாநோக்கம்.

கஅசு. சிகிச்சை - பரிகாரம். அவை என்னும் அஃறிணைப்படின்மைப்பெயர் இரண்டுள் முன்னையது சிகிச்சையையும், பின்னையது நோயையும் குறித்து நிற்பனவாம். ஏழை - அறிவிலி. நகுதல் - சிரித்தல்.

கஅள. வாசகர் - ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்; இது ஸ்ரீ ஞான சம்பந்த சுவாமிகளைப் 'பந்தர் என்பதுபோல் தலைக் குறைந்தது. மறம்-யமன். விறப்பு - அச்சம்.

இப்பார் மிசைப்பெறு தற்கரு மாநுட மேய்ந்துமதன்
முற்பாக மெல்லாம் விளையாட்டின் மூழ்கினன் மொய்ம்பிலதே
பிற்பாக மீதிற் சரியாதி செய்யப் பிழைபொறுத்துன்
மெய்ப்பாத மீதி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கஅஅ

உறவா யணுகிலென் றுமறி யாருயி ருய்வுணர்த்தா
ரறவோர் கிடைத்திலர் தேடி யடைவதற் காற்றலிலை
பெறவே நசைஇய பேதைக் குறுதுணை பேரருடான்
விறல்வே ழமுக கலங்காத கண்டவென் விண்ணப்பமே. கஅகூ

கைக்கணி தந்த வொருதந்த யானுன் கழற்கபயம்
புக்கன னைவுசெய் நோய்மாறு பாட்டினைப் போக்கியருள்
வக்கிர துண்டனென் காரணப் பேரை வகித்தனையே
மிக்கவர் போற்றுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

பெய்யு மெழிலி யனைவர்க்கும் பற்றியப் பெற்றியைநீ
யுய்யும் வழியை யெனக்குநன் காற்று முரமளித்துச்
செய்யுஞ் செயலுணர்த் தாயுளின் மீதியுஞ் சென்றொழிந்தான்
மெய்யும்பொய் யாகுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

கஅஅ. மாநுடம் - மனிதப்பிறப்பு. மூற்பாகம் - ஆயுளின் பூர்வபாகம். பிற்பாகம் - அதனது அபரபாகம். சரியாதி செய்ய மொய்ம்பு இலது - சரியைமுதலியன செய்வதற்கு வலிமை இன்றாயது. சரியாதி - வடமொழிப்புணர்ச்சி. மெய்ப்பாதம் - சத்தாயுள்ள உனது திருவடிகள்.

கஅகூ. அறவோர் - உய்யுநெறியாகிய அதனையுணர்த்தும் புண்ணிய சாலிகள். நசைஇய விரும்பிய; நசையென்னும் பெயரடியாகப் பிறந்த பெயரெச்சம்.

ககூ0. அணிதரல் - அணிதல்; ஒருசொல். வக்கிரதுண்டன் மாறுபாட்டை யொழிப்பவன். என் - என்னும் வினைத்தொகை, பேர் என்னும் பெயரைக்கொண்டு முடிந்தது. வகித்தல் - தரித்தல்.

தகூக. எழிலி - மேகம். அப்பெற்றி பற்றி - அத்தன்மையைக் கைப்பற்றி. உரம் - வலிமை. ஆயுளின்மீதி - சென்றது போக வெஞ்சிநின்ற வாழ்நாள். மெய் - சரீரம்.

பாவக் கிராகிய னென்றுனை வேதம் பகருதலாற்
பாவித்த லேதலை யானது செய்யப் பரந்ததுள்ளஞ்
சேவித்து வாழ்த்தித் தியானித் தநாமய சிந்மயனுய்
மேவப் புரிதி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௯௨

நெடுநாட் பழக்க முயிர்விடு நாள்வந்து நிற்குமெனும்
பிடிநான் பிடித்துச் சிவாய நமவெனப் பேசிலனின்
னடிநா டிலனெனக் கந்தோ புகலெவ னுருயிர்தான்
விடுநா ணினைப்பி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௧௯௩

உடற்கு வருமிடை யூறஞ்சு ருர்பரத் துற்றவர்விண்
ணடுக்கு மதியுழை பார்ப்புலிக் கஞ்சில தாங்கெனு நா
லுடற்கய லானவர்க் கஃதொக்கு மென்மருங் குற்றிடுமோ
விடற்குட லொவ்வேன் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

௧௯௨. பாவம் - பாவனை. கிராகியம் - கிரகித்தல். தலை - உயர்வாகும் என்க. உள்ளம் பரந்தது - மனம் விடயங்களிற் பிரவர்த்தித்தது. பரந்திடிற் பாவிக்க வொண்ணு தென்பதனை "பாவிடை யாடு குழல்போற் கரந்து பரந்த துள்ள, மாகெடு வேனுடை யாயடி யேனுன் னடைக்கலமே" எனவருந் திருவாசகத்தானறிக. ஆமயம் - நோய். அநாமயம் - நோயின்மை. சிந்மயம் - ஞானமயம்; சித்மயம் என்பது அவ்வாறு வந்தமை வடநூன் முடிபு. பாவக்கிராகியனென்று வேதம் பகருதலை "பாவக்கிராஹ்ய மநீடாக்யம் பாவாபாவ கரம்சிவம்" என்னும் சுவேதாச்சுவதரோபநிஷத்து வாக்கியத்தானறிக.

௧௯௩. பிடி - உறுதி. பிடித்து - கைப்பற்றி.

௧௯௪. பரத்துற்றவர் - பதிப் பொருளைப்பற்றி நின்றோர். மதியுழை - சந்திரவிம்பத்திலுள்ள மான். உடல் விடற்கு ஒவ்வேன் - சரீரத்தை நீங்குதற்குச் சம்மதியேன் என்க. இச்செய்யுள் "உடற்கு வருமிடையூ றென்குபரத் துற்றோ, ரடுக்கு மொருகோடி யாக—நடுக்க முறார், பண்ணிற் பொலியும் பனிமொழியா யஞ்சுமோ, மண்ணிற் புலியைமதி மான்" என்னும் நன்னெறிச்செய்யுட் கருத்துவைத் தோதப்பெற்றது.

கருவி கரண நிலையழி யாதவிக் காலத்துனை
மருவி யறியா மனமற வாமையை வாய்ப்பதெங்ங
னொருவி யுடலை யுயிர்நம னைக்கண் டுளந்தளர்ந்து
வெருவிய போது கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ககரு

மணங்கிர கப்பிர வேச மகஞ்செய வைத்தொருநாட்
கணம்பிற ழாதவைக் காவசெய் வாரைக் கடுத்துடல்பின்
பிணம்படு நாளையுத் தேசித்து முன்னலம் பேணிலனே
வெணம்பர வுக்க கலங்காத கண்டவென் விண்ணப்பமே, ககசு

உலகைத் தகித்த வனலா சுரனையுண் டோர்வடுவா
யுலகைக் குளிர்வித் தலிற்பால சந்திர வுத்தமப்பே
ருலகத் துறுமுனக் கோலமந் தோவுட லுட்டணநோய்
விலகத் துணித்தி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ககஎ

---

ககரு. கருவி - துணைக்காரணம். கரணம் - அந்தக்கரண பகிர்க் கரணங்கள். வெருவியபோது - அஞ்சியகாலத்து.

ககசு. மணம் - விவாகம். கிரகப்பிரவேசம்—குடிபுகுதல். மகம்- யாகம். பிறழாமை - தவறாமை. கடுத்தல் - ஒத்தல். வெண் அம்பர வுக்க - வெண்மையாகிய வத்திரத்தைத் தரித்த இடையை யுடையாய் என்க; "சுக்லாம்பரதரம்" என்பதன் பொருளும் இது; உக்கம் - இடை.

ககஎ. தகித்தல் - சுடுதல். வடு - பிரமசாரி. பாலசந்திரன் என்பது விநாயகர் சோடச நாமத்தொன்று; இதுமேற்காட்டிய கார ணத்தால் வந்ததென்பதனை, "பாலநல் லுருவாய் வருதலி னானும் பட்டர்பெரு வடவையங் கனலு, மாலமுஞ் சமழ்ப்ப வழற்றிய வனலா சுரன்றனை யருந்தியெவ் வுயிர்க்குங், கோலவெண் மதிபோற் குளிர் செய லானுங் கோமளந் தழைத்தவவ் விறையைச், சாலவை யகத்தோ ரனைவரும் பால சந்திர னென்றுஞ்சாற் றுவரால்" என்னும் விநாயக புராணச்செய்யுளா னறிக. துணித்தல் - சேதித்தல்.

காகங்கள் கோடியொர் கல்லின்மு னில்லாக் கணக்கதுபோற்
றாகங்கொ டுன்னரு ளுடின ரைக்கன்மங் தாக்கிலவென்
றாகங்கொ ளன்ப ருரைத்த றெறிந்தென் னுனைநினையேன்
மீகங்கை வேய்ந்த கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ககூஅ

சீவன் கருமம் பொருளிடங் காலஞ் சினைகுணமாம்
யாவு நினையன்றி யில்லை யியக்க வியங்குறுவேன்
சாவும் பிறப்புந் தவிர்ந்திறு மாந்துன் சரணநிழன்
மேவும் படிசெய் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ககூகூ

அருத்தி யடியவர்க் கீவதுன் னீர்மை யனத்தின்வளர்
துருத்தி சுமக்க முடியா தினியுன் றுணையடிக்கீ
ழிருத்தி யெனக்கின் னினியே நிராமய வின்பவபி
விருத்தி தருக கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உOO

---

ககூஅ. அன்பர் உரைத்தமையை "காகமா னதுகோடி கூடினின் றாலுமொரு கல்லின்முன் னெதிர்நிற் குமோ கன்மமா னதுகோடி முன்னேசெய் தாலுநின் கருணைப்ர வாகவருளைத், தாகமாய் நாடினரை வாதிக்க வல்லதோ" எனவரும் தாயுமானசுவாமி பாடலானறிக. ஊகம் - உட்பொருளுணர்தல். மீ - மேல்; சடையின்மேலென்க.

ககூகூ. சீவன் முதலியயாவும் நினையன்றி இல்லை யென்பது, இறைவனது வியாபகத்தைக் குறித்து நின்றது; இதனை "இருநில னாய்த் தீயாகி" எனவரும் நின்ற திருத்தாண்டக முதலியவற்றா னறிக. சீவன் - ஆன்மா. இயக்க வியங்குறுதலை "ஆட்டு வித்தா லாரொருவ ராடாதாரே" எனவரும் தேவாரத்தானறிக.

உOO. அருத்தி - விருப்பம். அன்னம் - சோறு; இங்கே அனம் என இடைக் குறைந்து நின்றது. அனத்தின் வளர் துருத்தி என்றது இங்கே சரீரத்தை; துருத்தி - தோற்பை; "பூந்துருத்தி பூந்துருத்தி யென்பீராயிற் பொல்லாப் புலாற்றுருத்தி போக்கலாமே" எனத்தேவா ரத்துட் கூறியதூஉம் அது. இன்னினியே - இப்பொழுதே; இதனை "இன்னினியே செய்த வறவினை" என்னும் நாலடியார்ச் செய்யுளா னுணர்க. நிராமய இன்பவபிவிர்த்தி யாவது - நோயற்ற சுகமுதிர்ச்சி.

அழுதா லுனைப்பெற லாமே யெனவறைந் தான்றவர்க
டொழுதார் தொழுதுந் துதித்தும் பயின்றிலன் றூயரினம்
பழுதேய் பதித னெனக்குளஞ் சித்திர பானுவைச்சேர்
மெழுகான தில்லை கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உ0க

சீவர் மதிப்பது கண்ணிய மாமெனச் சிந்தித்துவீ
ணுவதிற் போதினைப் போக்கி யலைவ னநிசமுடல்
சாவது மெய்நினைச் சாரேன் சொலலென் சமன்பிடிக்க
மேவரும் போது கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உ0உ

உருப்பதி னுயிரம் பற்பல யோனியி லுற்றிளைத்தேன்
றிருப்பத மீதியிச் சென்மத் தினியொரு சென்மமுண்டே
லொருப்படு முள்ளத் துனைமற வாமை யுதவடியேன்
விருப்ப மிதுவே கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உ0௩

அறிவிற் பெரியை யநாதி தொடுத்துன் னடியவனு
னறிவிற் சிறிய னதனுற் பிழைத்துள் ளழிந்தனன்மே
லறிவளித் துப்பக் குவனுக் குவதுன் னருட்கருகம்
விறல்விச் சுவனீ கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உ0ச

---

உ0க. அன்பற்ற அழுகையாற் பெறலாகா தென்பதனை, "யானே பொய்யென் னெஞ்சும் பொய்யென் னன்பும்பொய், யானுல் வினையே னழுதா லுன்னைப் பெறலாமே" என்னுந் திருவாசகத்தானறிக. பதிதன் - இழிந்தோன். சித்திரபானு - அக்கினி.

உ0உ. வீணுவது - வீண்காரியம். அநிசம்-பொய். மெய்-உண்மை. சமன் - யமன்.

உ0௩. உரு - உடம்பு. விரும்பப்படுவது மறவாமை என்பதனை "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே, வழுவா திருக்க வரந்தரல் வேண்டும்" என்னுந் தேவாரத்தானறிக.

உ0ச. அருகம் - உரிமை. விறல்விச்சுவன் - அளவிலாற்றலொடெங்கு நிறைந்தவன்.

புகிடம் பிறிதிலை யெற்குக் கிருத்திமம் போர்த்தவுடற்
சகடுயி ரச்சிற் றுழியோ விகாரச் சமன்வருவான்
மகிடத் ததுபொழு தஞ்சலென் றாகுவில் வந்தெனைக்கா
விகடப் பெயர்கொள் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

உள்ளத் திருந்து பிரேரித் துளைசென்றெ னுய்த்தபடிக்
கெள்ளத் தனைநலந் தீது மெனக்கிலை யென்செயினு
மள்ளற் குழிக்கு ளழுத்தன் முறையன் றடியிணையிவ்
வெள்ளைக் கருள்க கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உ0சு

நித்திய நின்னடிச் சார்பிவ் வுலக நிலையிலதென்
றெத்தனை கேட்டும் படித்து மறிவினு ளேறவில்லை
பத்தியு மில்லையிப் பாவி பவம்புவிப் பாரமதாம்
வித்தக காத்தி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உ0எ

தீதா வனபல செய்தே னமன்வரிற் செப்புவதென்
னாதாரம் வேறிலை சோத்த மதுபொழு தஞ்சலென்பாய்
தாதா பரம தயாளு வெனவுனைச் சாற்றினகாண்
வேதாக மாதி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உ0அ

---

உ0ரு. புகு இடம் - புகிடம் எனவந்தமை "முற்றுமற்றொரோ வழி" என்னும் நன்னூற்சூத்திரவிதிபற்றி. கிருத்திமம்-தோல். உடற் சகடு உயிரச்சு இற்றுழி - உடம்பாகிய பாண்டில் உயிராகிய அச்சாணி முறியப்பெற்ற விடத்து. சமன் - யமன். மகிடம் - எருமைக்கடா. ஆகு - பெருச்சாளி. விகடர் என்பது விநாயக சோடசநாமத் தொன்று.

உ0சு. பிரேரித்தல் - செலுத்துதல். உய்த்தபடிக்குச் சென்றமை யை "கருவிக ளனைத்து மென்னுட் கலந்துநின் றியக்கா நிற்கு, மொருவனை யன்றி யானே யுஞற்றுத லின்மை யாலே" எனவரும். திருத்தணிகைப்புராணச் செய்யுளானறிக. சென்றேன் என்பது, சென்றென் எனச் செய்யுளோக்கிக் குறுகிற்று; "தன்னை யானுந் தலை வனென் றோர்ந்தெனே" என்னுந்தேவாரத்தில் "ஓர்ந்தேனே" என்பது குறுகி வந்தாற்போல. அள்ளல் - நரகம். வெள்ளை - அறிவிலி.

உ0எ. பவம் - ஜனனம். புவிப்பாரம் - பூமிபாரம்.

உ0அ. சோத்தம் - இழிந்தார் செய்யும் அஞ்சலி.

பாதங் காஞ்சிர முன்னுறுப் பாக்கப் படுபொருபான்
மாதங் கருப்பை வளர்ந்துற் பவித்து மரித்திடுமிவ்
வாதங் கரீத்துன் னடியிணைக் கீழிறு மாப்பதெந்நாள்
வேதங் கடந்த கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௨0௯

பந்த விமோசன முன்னைப் பாரவுமிப் பத்தனுக்குத்
தந்து புரப்பதென் றென்றுகொ லோதுக்க சாகரமெய்
நந்து பிணியறப் பாசாங் குசத்தை நடாவுவதும்
வெந்திட் படையை கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

பவத்துயர் பூபத நப்போ தறியப் படாதிறக்கு
மவத்தை யுடலி னறிவு முதிர்தலி னுருயிர்க்குத்
தவத்தெரி யும்மறி யார்பிறர் போக்கத் தமியனுக்கோர்
விவத்தை புரிதி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. ௨௧௧

கோணு கணையவன் வேதன் றொழுநின் குரைகழற்கால்
பூணுகு முள்ளும் புறம்பு மெனக்கெனப் புந்திசெய்தேன்
மாணு தவனெற்கு வாய்த்திடு மோவன்றி வாஞ்சித்தது
வீணுகு மோசொல் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

௨0௯. ஆக்கப்படுபு - ஆக்கப்பட்டு ஒருபான்மாதம் - பத்து மாதம். ஆதங்கம் - துன்பம். இறுமாத்தல் - நிரதிசயாநந்தத்தாற் செம்மாந்திருத்தல்; இதனை "இறுமாந் திருப்பன் கொலோ வீசன் பல் கணத் தெண்ணப் பட்டுச், சிறுமா னேந்திதன் சேவடிக் கீழ்ச் சென்றங் கிறுமாந் திருப்பன் கொலோ" என்னுந் தேவாரத்தானறிக. வேதம் கடந்த - வேதங்கட்கும் அப்பாற்பட்ட; வேதங்கள்தந்த எனப் பிரித்து வேதங்களை மொழிந்தருளிய எனப்பொருள்கோடலும் ஒன்று.

௨௧0. பந்த விமோசனம் - பாசநீக்கம். நந்து - மிக்க; வினைத் தொகை.

௨௧௧. பவத்துயர் - பிறவித்துன்பம். பூபதநப்போது - பூமியில் விழுங்காலம். இறக்கும் அவத்தை - மரணத்துன்பம். தவ, மிக எனப் பொருடரும் ஓரிடைச்சொல். விவத்தை - ஒழுங்கு; விதாய மென்றும் வழங்குவர்.

௨௧௨. கோணுகணையவன் - விட்டுணு. இதில் நாகமென்னுஞ் சொல்லின் அம்முக்கெட்டது; "கோணுகணையானும்" எனவருந் தேவா

பூமாலை தம்மினும் புந்தியிற் றோன்றிப் புலர்ந்தறியாப்
பாமாலை யில்விருப் பம்முனக் காகும்பன் மாலையினும்
பாமாலைப் பட்சமுள் ளாயென்ப ரன்பர்கள் பாமுனும்பின்
வீமாலை யுங்கொள் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

பூதச ரீரப் பிணியா லுடனுறை புற்கலனும்
யாதனை மேவினன் சற்கா ரியம்புகற் கேதமது
சோதனை செய்யே றிருவருட் கோலமித் துற்பலனை
வேதனை நீக்கு கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உகச

பொல்லா தவனென வெள்ளி யெனைநீ புறக்கணித்தா
லெல்லா ரினும்மிழி வெய்துவன் சேவடி யீதியுகம்
பல்லா யிரஞ்செல் லினுந்தேவ ரீர்பரம் பாலிப்பது
வில்லா ரணியுங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உகரு

உலகத்து றங்கிப் பரத்தில் விழிப்ப துயர்வுண்மைநூல்
பலகற்று மென்னை சுவாநு பவத்திற் பலித்திலதுன்
னலகற்ற வாரரு ளுண்டே லமையு மதுதருதி
விலகற்ற நேச கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உகசு

---

ரத்திற்போல். மாணுதவன் - மாட்சியற்றவன். வாஞ்சித்தது - விரும்பியது.

உகங. வீ - புட்பம். பன்மாலையினும் பாமாலைப் பக்ஷமுள்ளானென்று அன்பர்கள் கூறுமாற்றை "பன்மாலைத் திரளிருக்கத் தமையுணர்ந்தோர் பாமாலைக் கேநீதான் பக்ஷமென்று, நன்மாலை யாவெடுத்துச் சொன்னார் நல்லோர் நலமறிந்து கல்லாத நானுஞ் சொன்னேன்" எனவருந் தாயுமானசுவாமி பாடலானறிக.

உகச. பூதசரீரம் - பஞ்சபூதங்களாலாய உடம்பு. புற்கலன் - சீவன். யாதனை - கடுந்துன்பம். ஏதம் - குற்றம்.

உகரு. எள்ளி - இகழ்ந்து. புறக்கணித்தல் - பராமுகஞ் செய்தல். பாலிப்பது தேவரீர்பரம் - பாதுகாப்பது தேவரீருடைய பாரமாம் என்க. வில் ஆர் - பிரகாசம் பொருந்திய ஆத்திமாலை.

உகசு. உலகத்து உறங்கிப் பரத்தில் விழிப்பதாவது - பிரபஞ்சத்தை மறந்து சிவத்தை நாடுதல். இதனை "உலகத் துறங்கி யுலகிறந்த

இருந்தவர் கோடிகை தூவே னருளநிற் கென்றனையேற்
பொருந்துவ தன்றஃ தறிகுவன் காசிப் புரிமுழுதும்
வருந்தி யழைப்ப வொரேசம யத்தின் மனைதொறுநீ
விருந்துண் டதனைக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

கோட்டும் பலின்மீ தியமன் குறுகியிக் கூட்டினைவிட்
டோட்டும் பொழுதுயிர்க் குட்கலக் கேற்படு முற்பவித்தா
ணூட்டும் பருவ மிதுகா ணுனதரு ணூட்டினையேன்
மீட்டும் பிறவேன் கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உகஅ

---

வொருவான் பொருளில் விழித்தந்த, வலகில் பரமா நந்தமய மான வமுதப் பெருங்கடலிற், கலவி முழுகித் திளைப்பார்கள்'' எனவரும் விநாயகபுராணச் செய்யுளானும், 'விழித்த கண்குருடாய்த்திரி வீரரும் பலரால்,' எனவருந் திருவிளையாடற்புராணச் செய்யுளானுமறிக. அலகு - அளவு.

உகஎ. இதன்பொருள்:—இருந்தவர் கோடி - திருவருட் பெறுவான் என்னை யெதிர்பார்த்திருந்தவர் அளவில்லாதவர், (ஆதலின்), நிற்கு அருளக் கைதூவேன் - கிர்த்திய பெருளத்தால் உனக்கு அநுக்கிரகஞ் செய்தற்குக் கையொழியேன், என்றனையேல் - என்னையாகில், அஃது பொருந்துவது அன்று - அவ்வாறு கூறல் பொருந்தாது, (ஏனெனில்,) நீ காசிப்புரி முழுதும் வருந்தி அழைப்ப ஒரே சமயத்தில் மனை தோறும் விருந்து உண்டதனை அறிகுவன் - நீ மகோற்கடாவதாரத்தில் ஸ்ரீ காசிக்ஷேத்திரத்தில் அங்குள்ளாரனைவரும் ஆசைமேலீட்டாற் பல்காற்கூறி வருந்தி யழைத்தவுடனே ஏககாலத்தில் வீட்டிற்கொருவனுய்ப் பல்லுருக்கொண்டு வீடுகடோறும் இருந்து விருந்துாய்த்த அதிசாமர்த்தியத்தினை அடியேன் தேவரீரது புராணவாயிலாக நன்கறிவேன் என்றவாறு. விருந்துண்டதனை ''மாதவர் தங்களோடு மன்னவனோடு மன்னன், காதலி யொடுக்கலோடுங் கலந்துகா வலனில்லத்து, ளோதன மாதி முன்போ லுவந்தினி தயின்ற ரேனை, மேதகு மனைக டோறும் விருந்தொருங் கயின்ற ரம்மா'' என்பதாதியாக வரும் விநாயகபுராணச் செய்யுட்களானறிக.

உகஅ. உம்பல் - எருமைக்கடா. கூடு - உடம்பு. கலக்கு - கலக்கம்; இது முதனிலைத் தொழிற்பெயர்.

பொதுவா மனைத்துயிர்க் கண்ணு மநாதியிற் பூத்தவரு
ளதிவாஞ்சை செய்சிறப் பாகு நினைத்தாங் கடியர்தமைக்
கதுவா விரைந்தருள் கைகடை யேனைக் கருதிலையென்
மெதுவா யிராதி கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உகக

வெம்மை நமன்றமர் மிக்கு விரவி விழுப்பதன்முன்
னிம்மையுன் றுளென்ற னெஞ்சத் தெழுதிவை யீங்கிகழி
லம்மை யடியேற் கருளுதி யென்பதிங் காரறிவார்
விம்ம லொழிக்குங் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

எத்தனை யான்முறை யிட்டாலு நின்செவிக் கேறிலதே
பத்தர் தமக்கு நினக்கும் பிழைத்த பவமுனுண்டே
லித்தனை துன்புறும் யானறி வீனத் தியற்றினுங்க
மித்தெனை யாள்க கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உஉக

சேணிப் படிபில மெங்குந் துருவினுந் திக்கற்றவ
ராணிற் பெணிலெனைப் போலக் கிடைப்ப தரிதுனக்கே
பாணிப் பொழிந்தரு ணீசெயத் தக்கதொர் பாத்திரநான்
வேணிப் பிறைய கலங்காத கண்டவென் விண்ணப்பமே. உஉஉ

---

உகக. பூத்த அருள் பொதுவாம் எனவும், விரைந்தருள்கை சிறப்பாகும் எனவும் கூட்டுக. அதிவாஞ்சை - மிக்க விருப்பம்; இது வடமொழி.

உஉ0. முதன் மூன்றடியும், திருநாவுக்கரசுநாயனுர் திருவாய் மலர்ந்தருளிய திருச்சத்தி முற்றத்துத் தேவாரம்.

உஉக. பவம் - பாவம். கமித்தல் - பொறுத்தல்; க்ஷமா என்னும் வடமொழி இவ்வாறுயிற்று

உஉஉ. சேண் - விண்ணுலகம். இதனை, "மால்வரை நிவந்த சேணுயர் வெற்பில்" எனவரும் திருமுருகாற்றுப்படையிற் காண்க. படி - மண்ணுலகம். பிலம் - கீழுலகம். திக்கு - பற்றுக்கோடு; இதனை, 'தேசிகனே நீ கண்டாய் திக்கு" எனவும், "திக்குவே நில்லை திருவுளமே யல்லாமல்" எனவும் வரும் அருணகிரி யந்தாதிச் செய்யுட்களா னறிக. பாணிப்பு - காலந்தாழ்த்தல்.

அநாதிபெத் தத்துவ முள்ளே னடிய னறிவின்மையா
லினுத செயலிழைத் தேன்பொறுத் தாள்வ தெவர்பொறுப்பென்
றநாதிமுத் தத்துவ னீயறி வாயென் னதெந்துவென
விருவிலை கூவிற் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.உஉரு

இதுவே சமய மெனையாளச் சன்ம மிதுகழிந்தா
லெதுவோ வருவது மாயா விசித்திர மென்செயுமோ
வதுவே கவலை யபய மபய மபயமருள்
விதுவேய் சடைய கலங்காத கண்டவென் விண்ணப்பமே.உஉச

மறைந்துயிர் தோறு நிறைநின் வியாபக வன்மைக்கெழில் [நான்
குறைந்திடு மென்றே வபக்குவ னென்றுகொண் டோவெனை
விறந்தழைத் தும்வெளிப் பட்டிலை செய்யருள் வேறுபுகல்
வெறுந்தமி யேற்கில் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

அநந்த வுயிர்கட் கநந்தமு மாய்நின் னருட்சத்தியே
யநந்த சுகந்தருந் தாரா தெனைவிட் டகல்வதெங்குன்
னநந்தசத் திக்கு மனுத்தசத் திக்கு மநேகநம
மினந்தகை வேணிக் கலங்காத கண்டவென் விண்ணப்பமே.

---

உஉரு. அநாதிபெத்தத்துவம் - பண்டே மலபந்தமுடைமை. இன்னுத செயல் - துன்பத்தைத் தருவனவாகிய செய்கை. அநாதி முத்தத்துவம்-பண்டே மலநீக்கமுடைமை. எந்து என்பது,என்னஎன விஞப்பொருளைத்தந்து நிற்குந் தெலுங்குச்சொல்; இதனை "அத்தனே யடியே னுதரித் தழைத்தா லதெந்துவே யென்றருளாயே" எனவருந் திருவாசகத்தானும், "உதவுங் கைம்மா, றெந்தெனத் தழுவிக் கொண் டங் கிலகுட றைவந் திட்டான்" எனவரும் விநாயகபுராணச் செய்யுளானு மறிக. கூவுதல் - அழைத்தல்.

உஉச. விசித்திரம் - கற்பனை. விது - சந்திரன்.

உஉரு. விறந்து - நெருங்கி; இதனை "விறப்பு முறப்பும் வெறுப் புஞ் செறிவே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானும் "அச்சமும் பலமுஞ் செறிவும் விறப்பெனல்" என்னும் பிங்கலந்தைச் சூத்திரத் தானும் அறிக. இல் - இல்லை எனப் பொருள்படுங் குறிப்புமுற்று.

உஉகூ. அநந்தசத்தி, அனுத்தசத்தி என்பன - சிவாகமத்தினும் திருக்குறளினும் சிவபெருமானுக்குக் கூறிய எண்குணத்திரண்டு;

சீரிய வெண்குண வானு முனையெவர் சிந்திப்பினுங்
காரிய காரண மெல்லா மொருங்கவர் கைவந்துறும்
வாரி யுதவவும் வல்லளஷ் டைசு வரியமெலாம்
வேரியம் போசை கலங்காத கண்டவென் விண்ணப்பமே.௨௨எ

அநந்தம் - கணக்கிலடங்காதது. அலுத்தம்-நாசமடையாதது. அநேக நம - அநேகநமஸ்காரம். மினம் - என்பதில் அம் சாரியை. தகைதல் - ஒத்தல்.

௨௨எ. எண்குணவான் - தன்வயத்தனுதன் முதலிய எட்டுக்குணமுடையான்; எண்குண வானும் என்பதற்கு எண்குணங்களை யுடைய சிதாகாச சொரூபியாகிய என்றலுமொன்று. எண்குணங்களாவன:— க. தன்வயத்தனுதல் - சுவதந்திரத்துவம்; ௨. தூயவுடம்பினனுதல் - விசுத்ததேகம்; ௩. இயற்கையுணர்வினனுதல் - நிராமயான்மா; ௪. முற்றுமுணர்தல் - சருவஞ்ஞத்துவம்; ௫. இயல்பாகவேபாசங்களினீங்குதல் - அநாதிபோதம்; ௬. பேரருளுடைமை - அலுப்தசத்தி; எ. முடிவிலாற்றலுடைமை - அநந்தசத்தி; அ. வரம்பிலின்பமுடைமை - திருப்தி என்பனவாம். அஷ்டைசுவரியங்களாவன - இராஜாங்கம், மக்கள், சுற்றம்,பொன், மணி, நெல், வாகனம், அடிமை என்னும் இவை. வேரி அம்போசை - தேனைப்பொழிகின்ற தாமரை மலரிலுறையும் இலக்குமிதேவி.

ஸ்ரீ குஞ்சிதபாதந் துணை.

திருச்சிற்றம்பலம்.

தேவிகோட்டைக்

கலங்காதகண்டவிநாயகர்

## விண்ணப்பமாலை.

முற்றிற்று.

# வாழ்த்து.

## எண்சீரடி ஆசிரியவிருத்தம்.

தேவைநகர் வாழ்ககலங் காத கண்ட
திவ்யவிநா யகன்புத்தி சித்தி வாழ்க
பூவலயம் பொலிவெய்தப் புயனீர் பெய்க
புராதநவே தாகமங்கள் பொய்யாச் சைவங்
காவலரந் தணர்யாகம் வானோர் கோக்கள்
கண்மணிவி பூதிபஞ்சாக் கரங்கள் வாழ்க
வாவலொடவ் விறையையுபா சிப்போ ரன்னோ
னாலயத்தைப் பாலனஞ்செய் யன்பர் வாழ்க.

திருச்சிற்றம்பலம்.



# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| ௪ | ௧௬ | பிரதக்ஷணஞ் | பிரதக்ஷிணஞ் |
| ௧௧ | ௧௩ | விண்ணப்பமெ | விண்ணப்பமே |
| ௧௫ | ௭ | பிரதக்கண | பிரதக்கிண |
| ,, | ௨௯ | பிரதக்கண | பிரதக்கிண |
| ௨0 | ௨0 | ழுதலியன | முதலியன |
| ௨௬ | ௩௩ | மேவேதே | மேவாதே |
| ௩௨ | ௧௧ | வள்ளுவர் | வள்ளுவர் |
| ௩௪ | ௩௧ | கணரம் | கரணம் |
| ௩௫ | ௨௬ | உரன்னுடையார் | உரனுடையார் |
| ௪௨ | ௧௭ | விண்டுணு | விட்டுணு |
| ௪௬ | ௧௪ | கிரமப்யடி | கிரமப்படி |
| ௫௫ | ௩௨ | பிர்ஹம | பிர்ஹ்ம |
| ௭௫ | ௨௯ | விருத்தாப் | விருத்தாப்பியம் |
| ௭௮ | ௨௮ | போலன்று | போல |